# கல்கி
## பொருளடக்கம்

மலர் 6 இதழ் 17 | 1946 நவம்பர் 24 | வியய கார்த்திகை 9





ஓங்கி வளர்ந்த கம்பத்தின் உச்சியில் கம்பீரமாகப் பறந்துகொண்டிருக்கும் சுதந்திர தேசியக் கொடியை இந்த வருஷத்தில் தளரா உறுதியுடன் தாங்கிப் பிடித்து நிற்கும் பெரும் பொறுப்பும் பாக்கியமும் ஆச்சாரிய கிருபளானிக்குக் கிட்டியிருக்கிறது.

*




*

சிந்து நதி பாயும் சிந்து மாகாணத்தில் பிறந்தவர் ஆச்சாரிய கிருபளானி. மிகச் சிறந்த கல்வியும் ஆராய்ச்சியும் உடைய இந்தியாவின் மேதாவிகளில் ஒருவர். முப்பது வருஷத்துக்கு முன்னால் காந்தி மகாத்மாவின் அந்தியந்த சீடர்களில் ஒருவர் ஆனார். இன்றுவரை காந்திமகான் இட்ட கோட்டைத் தாண்டாது நடந்து வருகிறார். பலவருஷ காலம் காங்கிரஸ் மகா சபையின் பொதுக் காரியதரிசியாக இருந்து திறமையாகத் தொண்டு செய்தார். சில மாதங்களுக்கு முன்னால் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்ய வந்தபோது, "ஜெஹிந்த்!" கோஷத்துடன் அவரை வரவேற்றவர்களைப் பார்த்து, "வந்தே மாதரத்தை மறந்து விட்டீர்களா? ஏதாவது புதிய கோஷம் ஒன்று வந்தால் உடனே பழைய கோஷத்தைக் கைவிட்டுவிட வேண்டுமா? இப்படிப்பட்ட சலன புத்திக்காரர்களால் என்ன காரியம் ஆகப்போகிறது?" என்று கேட்டு, வரவேற்க வந்தவர்களைத் திக்குமுக்காடப் பண்ணினார்.

ஆச்சாரிய கிருபளானிக்கு உண்மையான வாழ்க்கைத் துணைவியாக அமைந்தவர் ஸ்ரீமதி ஸுசேதா கிருபளானி. சமீபத்தில் விவரிக்க முடியாத துர்க்கதிக்கு உள்ளான கீழ் வங்காளத்துக்கு ஆச்சாரிய கிருபளானியும் அவருடைய தர்ம பத்தினியும் ஓடோடியும் சென்று, விமானத்திலே பறந்து சென்று, அங்கே நடந்த கொடுமைகளை உலகத்துக்கு வெளிப்படுத்தியது பிரசித்தமான விஷயம்.

நாளது 1946-ம் வருஷம் ஒரு விதத்தில் பாரத நாடு பெருமிதத்துடன் மகிழ்ச்சியடைய வேண்டிய வருஷம்; மற்றொரு விதத்தில் தலை குனிந்து கண்ணீர் வடிக்கவேண்டிய வருஷம். இப்பேர்ப்பட்ட வருஷத்தில் ஆச்சாரிய கிருபளானி காங்கிரஸ் மகாசபையின் அக்கிராசன பதவியை ஏற்கிறார். அவருடைய தலைமையில் பாரத நாடு சகல நன்மைகளையும் அடைந்து ஓங்கட்டும்.

# நீங்கள் பிரியப்படும் கறிகளுக்கு டால்டா சுவையளிக்கிறது—மேலும் உங்களுக்கு ஊக்கத்தையும் கொடுக்கிறது!




டால்டாவினுல் சமையல்செய்த உணவு பழுதாகாது! எளிதில் ஜீரணமாகின்றதும், விடமின் நிரம்பியதுமான டால்டா, வழக்கமாக உட்கொள்ளும் தின்பண்டங்களைக் கூட அதன் இனிய வாசனையால் ருசியுள்ள தாக்குகிறது—அதனுல் உங்களுக்கு தினமும் சாப்பிடும் உணவுகளின்மேல் சலிப்பு ஏற்படுவதில்லை. டால்டாவினுல் சமையல் செய்யுங்கள். இச்சுத்தமான சமையலுக்குதவும் சாதனத்தின் அரிந்த சத்தைத்தரும் திறமையைக் கொண்டு உங்கள் உணவைச் சீர்படுத்திக் கொள்ளுங்கள். டால்டா சமையலுக்குகந்த சாதாரண வஸ்து அன்று என்பது ஞாபகமிருக்கட்டும்—அது குடும்பங்களை ஆரோக்கியமுடையதாகச் செய்யும்; அவர்களுக்கு அதிகப்படியான ஊக்கத்தையும் அளிக்கும்.

* ஆங்கிலத்தில் மட்டும் எழுதப்பட்டுள்ள டால்டா சமையல் புத்தகத்தின் உதவியுடன் உங்கள் சாப்பாட்டுத் திட்டத்தை அமையுங்கள். சத்தைத் தரும் திறமைக்கென் ஆராய்ந்தெடுத்த சுவையுள்ள 150-க்கு மேற்பட்ட இந்தியத் தின்பண்டங்களைப் பக்குவம் செய்யும் முறைகள் இதில் அடங்கியிருக்கின்றன. உங்கள் புத்தகத்திற்கு Dept. B461 P.O. Box No. 353, Bombay, என்ற விலாசத்திற்கு எண்ணு அணு ஸ்டாம்பு அனுப்புங்கள்.



# கல்கி



மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 17

# என்ன சேதி?

## யார் பொறுப்பு?

"சர்க்காரின் ஜவுளிக் கொள்கை ஒரு பரீக்ஷார்த்தமே. அது வெற்றி பெற்றால் புரட்சிகரமான மாறுதலை உண்டு பண்ணும். அது தோல்வியுற்றால் அதற்கு நீங்களே பொறுப்பு!" என்று கனம் வி. வி. கிரி அவர்கள் லயோலா கல்லூரி மாணவர்களைப் பார்த்துக் கூறியதாக ஒரு தினப் பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. "நீங்களே பொறுப்பு" என்று கனம் தொழில் மந்திரி கூறியபோது, பாவம், லயோலா காலேஜ் மாணாக்கர்களின் தலையிலே மட்டும் அந்தப் பாரத்தைப் போட எண்ணியிருக்க மாட்டார். "சென்னை மாகாணப் பொது ஜனங்கள்" எல்லாரையும் மனதில் வைத்துக் கொண்டுதான் "நீங்கள்" என்று சொல்லியிருப்பார். "சர்க்காரின் ஜவுளிக் கொள்கை" என்னும்போது, "சர்க்காரின் ஆலை ஒழிப்புக் கொள்கை"யைத்தான் அவர் குறிப்பிட்டார் என்பதிலும் சந்தேகமில்லை. ஆனால் காந்தி மகான் இது விஷயமாக (அதாவது ஜவுளிக் கொள்கையின் பொறுப்பு விஷயமாக)ச் சொல்லியிருப்பதை நாம் கனம் வி. வி. கிரி அவர்களுக்கு ஞாபகப்படுத்த வேண்டியிருக்கிறது.

"சென்னை மந்திரி சபை கண்யமுடையதாயும் திறமையுள்ளதாயும் இருந்தால் எல்லாம் நன்றாக நடக்கும். இல்லாவிடில் ஒன்றும் சரியாக நடக்காது" என்று காந்தி மகான் தமது தீர்க்க அபிப்பிராயத்தைத் தமது சொந்த "ஹரிஜன்" பத்திரிகையில் அச்சிட்டு வெளிப்படுத்தியிருக்கிறார். எனவே, சென்னை சர்க்காரின் ஜவுளிக் கொள்கை தோல்வியடைந்தால் அதன் பொறுப்பை லயோலா காலேஜ் மாணாக்கர்கள் தலையிலேயோ, அல்லது சென்னைப் பொது மக்கள் தலையிலேதானோ போட்டுவிடப் பார்ப்பது நியாயமாகாது. அந்தப் பொறுப்பைச் சென்னை மந்திரிமார்கள்தான் ஏற்றுக் கொள்ள வேண்டும். மேலும், ஆலை ஒழிப்பு விஷயத்தில் சென்னைச் சட்ட சபையின் அபிப்பிராயத்தைக் கேட்டு அதனுடைய ஆதரவைப் பெற வேண்டும் என்பதாகவும் மகாத்மா யோசனை சொல்லியிருக்கிறார். சென்னை மந்திரிகள் இப்படிச் செய்வது முன் ஜாக்கிரதையான காரியமாயிருக்கும். ஏனெனில் ஆலை ஒழிப்புக் கொள்கை ஒரு வேளை வெற்றி பெறாமல் விபரீதமாக முடிந்தால், "கண்யமற்றது: திறமையற்றது" என்ற அத்தாட்சிப் பத்திரம் சென்னை மந்திரிகளுக்கு மட்டும் வந்து சேர்வதற்குப் பதிலாக, அந்தக் கீர்த்தியைச் சென்னைச் சட்ட சபை அங்கத்தினர் எல்லாருமே பகிர்ந்து அடைவார்கள் அல்லவா?

## செந்தூர் வேலன்

திரைகடலோரத்தில் அலை முழக்கத்தினிடையே அனவரதமும் நின்று தமிழகத்தைப் பாதுகாத்து வரும் திருச்செந்தூர் வேலனின் சந்நிதி சென்ற வாரத்தில் தமிழ் மக்கள் அனைவருக்கும் திறந்து விடப்பட்ட செய்தி அறிந்து மிகவும் மகிழ்கிறோம். பக்த கோடிகளின் குரல் அலை கடல் ஒலியையும் அடக்கிக் கொண்டு செந்தூர் வேலனுடைய திருச்செவியில் விழுந்திருக்கிறது. அப்படியிருக்கும்போது இரண்டு நதிகளின் நடுவில் நிம்மதியாகத் தூங்கும் ஸ்ரீ ரங்கநாதர் மட்டும் இன்னும் ஏன் கண் திறக்கவில்லை? முருகனுக்கு ஆறு முகங்களும் பன்னிரண்டு காதுகளும் உண்டு என்று சொல்லலாம். ஆனால் ஸ்ரீமந் நாராயணனுக்கு ஆயிரம் சிரங்களும் இரண்டாயிரம் செவிகளும் உண்டு என்று புருஷ சூக்தம் முதலிய வேத மந்திரங்கள் முழங்குகின்றனவே? அப்படியிருக்க, பக்தர்களுடைய குரல் இன்னும் பரந்தாமனுடைய காதில் ஏன் விழவில்லை? ஒருவேளை "ஸ்வாமி வரம் கொடுத்தாலும் பூசாரி கொடுக்க

வில்லை!" என்ற பழமொழிக்கு ஸ்ரீரங்கம் கோயில் உதாரணமா யிருக்கிறதோ?

## மகத்தான வெற்றி

**இ**ந்தியா தேசத்துக்கு ஒரு மகத்தான வெற்றி கிடைத்திருக்கிறது. நாற்பது கோடி மக்கள் வாழும் இந்த மாபெரும் தேசத்துக்குக் கிடைத்திருக்கும் அந்த வெற்றியைக் குறித்து இமய மலையின் உச்சியில் ஏறிப்போய்க் கொடி நாட்டிக் கொண்டாட வேண்டும்.

ஐக்ய தேச ஸ்தாபனத்தைச் சேர்ந்த பந்தோபஸ்துக் கௌன்ஸிலில் இந்தியா ஒரு ஸ்தானத்தைக் கோரியது.

மேற்படி பந்தோபஸ்துக் கௌன்ஸிலில் அமெரிக்கா, பிரிட்டன், ருஷியா, பிரான்ஸ், சைனா ஆகிய தேசங்கள் நிரந்தர அங்கத்தினர்களா யிருக்கின்றன.

மற்றும் ஆறு ஸ்தானங்களுக்குத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கும் முறை ஏற்பட்டிருக்கிறது. இந்த வருஷம் காலியான மூன்று ஸ்தானங்களில் ஒன்றுக்கு இந்தியா போட்டி யிட்டது. இன்னும் சில தேசங்களும் போட்டி யிட்டன. ஸிரியா, பெல்ஜியம், கொலம்பியா என்னும் மூன்று சின்னஞ்சிறு தேசங்கள் தேர்ந்தெடுக்கப் பட்டன. ஆனால் இந்தியா தேர்ந்தெடுக்கப் படவில்லை. ஏன்? இந்தியா பந்தோபஸ்துக் கௌன்ஸிலுக்கு வந்தால், அந்தக் கௌன்ஸிலின் பந்தோபஸ்துக்கே ஆபத்து வந்து விடலாம் என்று மற்ற தேசங்கள் கருதியதே காரணமா யிருக்க வேண்டும்!

ஐக்ய தேசங்களின் சபையையும் அதன் ஒரு பகுதியான பந்தோபஸ்துக் கௌன்ஸிலையும் இப்போது ருஷியா, அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய மூன்று தேசங்களும் ஆட்டி வைத்து வருகின்றன. மற்ற தேசங்களின் வோட்டுகளை தங்கள் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ள உபயோகித்து வருகின்றன. அந்த இராஜ தந்திரச் சூழ்ச்சிகளுக்கு இந்தியா உடன் படாது என்று வல்லரசுகள் பயந்து கொண்டுதான் இந்தியாவுக்கு வோட்டுக் கிடைக்க விடவில்லை. வல்லரசுகள் இத்தகைய பயம் கொண்டிருப்பதே இந்தியாவுக்கு மகத்தான வெற்றி யல்லவா?

## நிரந்தர ஸ்தானம்

**ப**ந்தோபஸ்துக் கௌன்ஸிலில் இப்போது நிரந்தர ஸ்தானம் பெற்றுள்ள நாடுகளுக்கு இந்தியா எந்த விதத்திலும் குறைந்ததல்ல. எனவே, இந்தியாவுக்கு மேற்படி கௌன்ஸிலில் நிரந்தர ஸ்தானம் கொடுப்பதுதான் நியாயமாகும். உலகம் உண்மையான பந்தோபஸ்துடன் இருக்க வேண்டுமென்றால் எல்லா தேசங்களும் சேர்ந்து உடனே இந்தியாவுக்கு நிரந்தர ஸ்தானம் அளிக்க வேண்டும். பெல்ஜியம், பிரேஸில் முதலிய சிறு தேசங்களோடு இந்தியா போட்டியிட வேண்டிய நிலைமை உதவாது. உண்மையில், இந்தத் தடவை அவ்வாறு போட்டியிட இந்தியப் பிரதிநிதிகள் சம்மதித்ததே இராஜ தந்திரத்துக்கு உகந்த காரியமல்ல.

## பிரம்ம ரிஷிப் பட்டம்

"**வ**சிஷ்டர் வாயால் பிரம்ம ரிஷி" என்ற பட்டத்தை இந்தோனேஷியக் குடியரசு சர்க்கார் பெற்றிருக்கின்றனர்.

ஆதிக்க ஆசையின் காரணமாக இதுவரை வெகு பிடிவாதம் காட்டி வந்த டச்சு சர்க்கார் இப்போது இந்தோனேஷியக் குடியரசு சர்க்காருடன் ஒரு ஒப்பந்தத்துக்கு வந்திருக்கிறார்கள். அந்த ஒப்பந்தத்தின்படி ஜாவா, சுமத்ரா, மதுரா ஆகிய மூன்று இடங்களிலும் தற்போது நடைபெற்று வரும் இந்தோனேஷியக் குடியரசு சர்க்காரை அங்கீகாரம் செய்திருக்கிறார்கள்.

இந்த பிரம்ம ரிஷிப் பட்டத்தை அளித்து விட்டு அதே சமயத்தில் குடியரசு சர்க்காருடன் இன்னும் சில ஒப்பந்தங்களையும் செய்துகொண்டிருக்கிறார்கள். ஒப்பந்தம் என்னவென்றால், ஹாலந்துக்கும் இந்தோனேஷியாவுக்கும் பொதுவாக ஒரு யூனியனை ஏற்படுத்த வேண்டும் என்பது ஒன்று. இந்தோனேஷிய நாடுகளின் சமஷ்டி என்பது மற்றொன்று. இந்த ஒப்பந்தம் ரொம்பவும் வரவேற்கத் தக்கது என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் ஏதாவது சந்தேகமிருந்தால் குடியரசு சர்க்காரின் பிரதமர் டாக்டர் ஷாரீர் மேற்படி திட்டத்துக்கு ஒரு நாளும் இணங்கியிருக்க மாட்டார்!

சுதந்திரக் குடியரசு ஆட்சியை ஸ்தாபிக்கும் பொருட்டு ஜாவா மக்களும் அவர்களுடைய தலைவர் டாக்டர் சுகர்ணுவும், பிரதமர் ஷாரீரும் பெரும் போராட்டம் நடத்தி டச்சுக்காரர்களைப் பணிய வைத்திருக்கிறார்கள். இனிமேலும் இந்தோனேஷியாவின் பூர்ண சுதந்திரத்தை நிலைநாட்டுவதற்குக் கடைசி வரையில் போராடும் தீரமும் திறமையும் அவர்களுக்கு உண்டு என்பதில் நமக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. வாழ்க ஜாவா மக்கள்! வாழ்க பூரண சுதந்திரம்!







டர் அம்பேத்கார் இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்ததும், "ஜனாப் ஜின்னா நான் முன்னமே சொல்லி தபடிதான் ஸ்ரீ மண்டலை லீக் பிரதிநிதியாக நியமித்திருக்கிறார்!" என்று திருவாய் மலர்ந்திருக்கிறார்.

## புது மேயர்

சென்னை நகர மேயர் பதவிக்கு ஸ்ரீ சுந்தரராவ் நாயுடு அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டது குறித்து மகிழ்ச்சி அடைகிறோம். (வருஷத்துக்கு ஒரு தடவை இந்த மகிழ்ச்சியை நாம் அடைந்தே தீருமாறு சென்னை நகர சபை விதிகள் அமைந்திருப்பதைப் பெரிதும் பாராட்டுகிறோம். வேறு என்ன விதமான கவலைகளும் துயரங்களும் இருந்தாலும் வருஷம் ஒரு முறை புது மேயர் வந்து இந்தச் சென்னை நகர வாசிகளைச் சந்தோஷக் கடலில் ஆழ்த்தி விடுவது வழக்கமாயிருந்து வருகிறது.)

நிற்க. இந்த வருஷத்துப் புது மேயர் ஸ்ரீ சுந்தரராவ் நாயுடு வெகு உறுதியுள்ள மனிதர். அரசியலில் அவர் ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்தவர். ஜஸ்டிஸ் கட்சி அதல பாதாளத்துக்குப் போய் விட்டதாகப் பலர் சொன்ன பிறகும் அவர் அந்தக் கட்சியைக் கைவிடவில்லை. அதே விதமான உறுதியை நகர சபை விஷயத்திலும் கையாண்டு அந்தச் சபையில் ஆதிகாலத்திலிருந்து அங்கம் வகித்து வந்திருக்கிறார். நகர முன்னேற்றத்துக்கான பல சிறந்த காரியங்களை இடைவிடாமல் செய்து வந்திருக்கிறார்.

சாதாரணமாக ஒவ்வொரு தடவையும் மேயர் தேர்தல் நடக்கும்போதெல்லாம் பதவிக்கு வரும் புது மேயர் தாம் செய்யப் போகும் காரியங்களுக்கெல்லாம் முன்கூட்டியே தம்பட்டம் அடிப்பார். ஒரு வருஷம் ஆனதும் "போறே விதோ, போறே விதோ" என்று பாடிக்கொண்டு அடுத்த மேயரையும் பாராட்டி விட்டுப் போய்ச் சேர்வார். ஆனால் அடக்கமும் திறமையும் வாய்ந்த ஸ்ரீ சுந்தரராவ் நாயுடு அந்த வழக்கத்துக்கு விரோதமாக எந்தவிதமான ஆர்ப்பாட்டமும் செய்யவில்லை. "அதைச் செய்யப் போகிறேன்: இதைச் செய்யப் போகிறேன்" என்று பயமுறுத்தவில்லை. கப்சிப் என்று மௌனமாகப் பதவியை ஏற்றுக் கொண்டிருக்கிறார். ஆகையால் புது மேயர் சொல்லாமல் செய்யும் பெரியார்களின் கோஷ்டியைச் சேர்ந்தவர் என்று தோன்றுகிறது. புது மேயரின் அடக்கத்தைப் பெரிதும் பாராட்டுகிறோம். அவர் மேற்படி பதவியில் ஒரு வருஷ காலம் நீடூழி இருந்து சென்னை நகருக்கு நிரந்தரமான பல சேவைகளைச் செய்வார் என்று எதிர்பார்க்கிறோம்.

# முயற்சி பலிக்குமா?




"அரசியல் நிர்ணய சபையை ஒத்திப்போட வேண்டும்" என்று ஜனாப் ஜின்னா கோரியதை நிராகரித்து டிசம்பர்

# கரை தெரிகிறது! கப்பல் ஜாக்கிரதை!!

எல்லையற்றது போல் நீண்டு பரந்து கிடந்த ஆழ்கடலில் ஒரு கப்பல் சென்று கொண்டிருந்தது. எத்தனையோ புயல்களுக்கும் சுழல்களுக்கும் மலைபோல் எழுந்த அலைகளுக்கும் மற்ற விபத்துக்களுக்கும் ஈடு கொடுத்துக் கொண்டு அது குறித்த திசையை நோக்கிப் பிரயாணம் செய்தது. கப்பலிலே இருந்த சொற்ப உணவைப் பத்திரமாய்ப் பாதுகாத்துப் பிரயாணிகளுக் கெல்லாம் அளவாகப் பங்கிட்டுக் கொடுத்து வந்தார்கள். பிரயாணிகளுக்கு அவ்வப்போது ஏற்பட்ட நோய் நொடிகளைத் தீர்த்து வந்தார்கள். கப்பலுக்கு ஏற்பட்ட சேதங்களைப் பழுது பார்த்து, துவாரங்களை அடைத்து, இயந்திரங்களைச் செப்பனிட்டுப் பத்திரப் படுத்தி வந்தார்கள். இவ்வளவையும் கப்பல் தலைவனும் அவனுக்கு உதவியா யிருந்த மாலுமிகளும் செய்து வந்தார்கள்.

எத்தனையோ காலம் இம்மாதிரி கப்பலைச் சர்வ ஜாக்கிரதையாகச் செலுத்திக் கொண்டு வந்தார்கள்.

பற்பல ஏமாற்றங்களுக்குப் பிறகு, ''கரை என்பதே கிட்டாதோ? கடலிலேயே முழுகி மடிய வேண்டியது தானோ?'' என்று எவ்வளவோ காலம் ஏங்கிய பிறகு, கடைசியாக ஒரு நாள், ''அதோ கரை தெரிகிறது!'' என்ற ஒரு குதூகலக் குரல் எழுந்தது.

குறிப்பிட்ட திசையைச் சந்தேகத்துடனே பார்த்தார்கள். பூதக் கண்ணாடி வைத்துக் கொண்டு பார்த்தார்கள். ''அதற்குள் சந்தோஷப்பட வேண்டாம்! நன்றாய்த் தெரிந்து கொண்டு சந்தோஷப்படலாம்'' என்று ஒருவருக் கொருவர் எச்சரிக்கையும் செய்தார்கள்.

நன்றாய்ப் பார்த்த பிறகு, ''கரைதான்! சந்தேகமில்லை!'' என்று ஏற்பட்டது.

முடிவே இல்லையோ என்று தோன்றிய பிரயாணம் கிட்டத்தட்ட முடிந்து விட்டது. கப்பல் கரையை அடைய இன்னும் சிறிது தூரம்தான் பாக்கியிருக்கிறது. சொற்ப நேரத்திலே கப்பலைக்கொண்டு வந்து கரையோரம் நிறுத்திவிடலாம். நங்கூரம் பாய்ச்சிவிடலாம். படகுகளை இறக்கிவிடலாம். பிரயாணிகள் பிறகு கப்பலிலிருந்து இறங்கிக் கரையை அடையலாம்.

கப்பல் தலைவரும் மாலுமிகளும் அப்போது அடையக் கூடிய திருப்தியைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? பிரயாணிகளின் குதூகலத்தைப் பற்றித்தான் கேட்கவா வேண்டும்?

ஆனால் அந்தக் குதூகலமான சமயத்திலே, களியாட்டங்களுக்கு மத்தியிலே, எதிர் பாராத விபத்துக்கள் திடீர் திடீர் என்று ஏற்படுகின்றன.

பிரயாணிகளின் குதூகலத்திலேயே ஆபத்தும் இருக்கிறது. இத்தனை நாள் பொறுமையோடு காத்திருந்தவர்கள் இப்போது கரை தெரிந்ததும் வெகு அவசரப்படுகிறார்கள். ஒருவரை யொருவர் இடித்துத் தள்ளிக் கொண்டு முன்னால் இறங்கப் பார்க்கிறார்கள். சிலர் பாக்கி தூரத்தை நீந்திக் கடந்து விடலாம் என்று கடலிலேயே குதிக்கிறார்கள். சிலர் தாங்களே படகுகளை அவிழ்த்து இறக்குகிறார்கள். இந்த அவசர முயற்சிகளினால் பிரயாணிகளுக்குள்ளே சண்டை சச்சரவு ஏற்படுகிறது; குத்து வெட்டு நடக்கிறது; கூச்சல் குழப்பம் உண்டாகிறது.

அதே சமயத்தில் திடீரென்று எங்கிருந்தோ புயலும் மழையும் சேர்ந்து வந்து தாக்குகின்றன.

தயிர் கடையும் மத்தைப்போல் கப்பல் கிர்ரென்று சுழல்கிறது.

கொஞ்சம் அஜாக்கிரதையா யிருந்தால் எல்லாம் தீர்ந்தது. கப்பல் கரையிலுள்ள பாறையிலே மோத வேண்டியதுதான்; உடைந்து நொறுங்க வேண்டியதுதான்; பிரயாணிகள் அனைவரும் கடலில் முழுக வேண்டியதுதான்.

இத்தனை காலம் எவ்வளவோ சிரமப்பட்டு எவ்வளவோ பொறுமையுடன் கப்பலைச் செலுத்திக் கொண்டு வந்ததெல்லாம் வீணாகி விடும்!

கப்பல் தலைவருக்கும் உப தலைவர்களுக்கும் இப்போதுதான் பொறுப்பு அதிகமாகிறது; அவர்களுடைய கவலையும் மிகுதியாகிறது.

கரையருகே வந்த கப்பலை மோதி உடையாமல் பாதுகாக்க வேண்டும்.

பிரயாணிகள் அதிக குதூகலத்தினாலோ அவசர பீதியினாலோ தங்களுக்குள்ளே சண்டை போட்டுக் கொள்வதை அடக்க வேண்டும். மாலுமிகளுக்குள் கட்டுப் பாட்டை நிலைநாட்ட வேண்டும்.

மொத்தத்தில், வெள்ளைய் திரண்டு வரும்போது தாழி உடைந்து விடாமல் சர்வ ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

இத்தகைய மகத்தான பொறுப்பு இப்போது நமது காங்கிரஸ் மாபெருந் தலைவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

அடிமைக் கடலைக் கடந்தாகி விட்டது. காங்கிரஸ் கப்பல் சுதந்திரக் கரையை நெருங்கி விட்டது. ஆனாலும் இந்தச் சமயம் பார்த்து எதிர் பாராத அபாயங்கள் எல்லாம் திடீர் திடீர் என்று வந்து சூழ்கின்றன; கப்பல்மீது மோதுகின்றன.

இப்படிப்பட்ட மிக முக்கியமான சந்தர்ப்பத்தில் மீரத் நகரத்தில் காங்கிரஸ் மகா சபை கூடுகிறது.

* * *

காங்கிரஸ் மகா சபை தோன்றி அறுபது வருஷம் பூர்த்தியாகி விட்டது. எனவே, காங்கிரஸுக்கு இந்த வருஷம் வைர விழாக் கொண்டாடுவது மிகவும் பொருத்தமாகும்.

அதோடு இவ்வருஷத்திலே காங்கிரஸ் மகா சபையின் உன்னத இலட்சியமாகிய இந்தியாவின் சுதந்திரம் ஏறக்குறைய சித்தியாகி விட்டது என்று சொல்லலாம்.

எனவே, இந்த வருஷத்துக் காங்கிரஸ் மகா சபையை வழக்கத்தைக் காட்டிலும் அதிக குதூகலத்துடனும் கொண்டாட்டத்துடனும் நடத்த வேண்டியது நியாயம்.

ஆனால் அதற்கெல்லாம் மாறாக மிக மிக அடக்கத்துடன் ஆடம்பரமின்றி மீரத் காங்கிரஸ் நடைபெறுகிறது.

வழக்கமான ஆர்ப்பாட்டங்கள், கொண்டாட்டங்கள், கண்காட்சிகள், உப மகாநாடுகள் ஒன்றுமே மீரத் காங்கிரஸை யொட்டி நடைபெறப் போவதில்லை.

இதற்கெல்லாம் காரணம், கப்பல் கரையை நெருங்கி யிருக்கும் சமயத்தில் ஏற்பட்டிருக்கும் விபரீதமான அபாயங்களே யாகும்.

அந்த விபரீத அபாயங்கள் எல்லாம் ஜனப் ஜின்னாவின் வீண் பீதியினாலும் அதைக் காட்டிலும் வீணான பயமுறுத்தல்களாலும் ஏற்பட்டவை.

கீழ் வங்காளத்திலே முஸ்லீம்கள் தங்கள் சொந்த ஹிந்து சகோதரர்களுக்குச் சொல்ல முடியாத கொடுமைகளை இழைத்தார்கள்.

பீஹாரிலே ஹிந்துக்கள் கீழ் வங்காளக் கொடுமைகளுக்குப் பழி தீர்ப்பதாக எண்ணி முஸ்லீம் சகோதரர்களுக்குப் பயங்கரக் கொடுமைகளை இழைத்தார்கள்.

காங்கிரஸ் மகா சபை நடைபெறுகிற மீரத்திலும் அதைச் சுற்றிலும் ஹிந்துக்களும் முஸ்லீம்களும் பட்சபாதமின்றி ஒருவருக்கொருவர் கொடுமைகளை இழைத்துக் கொண்டார்கள்.

இப்படிப்பட்ட சூழ் நிலையில், அறிவுள்ள மக்கள் வெறி கொண்டு அறிவை அடியோடு இழந்து மிருகப் பிராயமான காரியங்களைச் செய்து வரும் நிலைமையில், — குதூகலமும் கொண்டாட்டமும் எங்கிருந்து வரும்?

* * *

அடக்கமாகவும் ஆடம்பரமில்லாமலும் மீரத் காங்கிரஸ் கூடினாலும், அதன் தலையில் சுமந்திருக்கும் பாரம் மிகவும் பெரியது.

இவ்வளவு கஷ்டமான, சிக்கலான, தர்மசங்கடமான நிலைமையில் இதற்கு முன்னால் எந்தக் காங்கிரஸும் கூடியதில்லை யென்று சொல்லலாம்.

ஏனெனில் சென்ற வருஷம் வரையில் காங்கிரஸ் மகா சபை பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தோடு இந்தியாவின் சுதந்திரத்துக்காகப் போராடிக் கொண்டிருந்தது.

அன்னியர்களோடு தேச விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருந்த வரையில், எத்தனை கஷ்டம் ஏற்பட்டாலும், எத்தனை தோல்வி ஏற்பட்டாலும்கூடக் குதூகலத்துக்கும் உற்சாகத்துக்கும் குறைவு ஏற்படாது.

ஆனால் இப்போதோ அன்னியர்களோடு போராட்டம் இல்லை; சொந்த சகோதரர்களோடு மன்றாட வேண்டியிருக்கிறது.

அந்தச் சகோதரர்கள் வெறிகொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு நன்மை எது, தீமை எது என்று தெரியவில்லை. அவர்களைக் குழியில் விழாமலும் தற்கொலை செய்து கொள்ளாமலும் காப்பாற்றவேண்டிய பொறுப்பு தேசிய மகா சபைக்கு ஏற்பட்டிருக்கிறது.

மகத்தான பொறுப்பு, மிகவும் கடினமான பொறுப்பு என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை.

* * *

நன்மை எது, தீமை எது என்று தெரியாத நிலைமையில் சிலர் இருப்பதாகச் சொன்னோம்.

அவர்களுக்குள்ளே தலைமையானவர் காயிதே ஆஜம் ஜனாப் ஜின்னா அவர்கள்தான்.

அவருடைய அறிக்கைகள் இன்று ஒரு விதமாயும், நாளை ஒருவிதமாயும் இருக்கின்றன.

"கொலையும் கொடுமையும் செய்யாதீர்கள்! செய்தால் பாகிஸ்தான் கிட்டாது!" என்று முதல் நாள் அறிக்கையில் அவர் சொன்னார்.

மறுநாள் விடுத்த அறிக்கையில், "பாகிஸ்தான் கிட்டும் வரையில் தேச நிலைமை இப்படித்தான் இருக்கும்!" என்று சொல்லியிருக்கிறார்.

எனவே, கொலை கொடுமை முறைகளால் பாகிஸ்தானுக்கு நல்லதா கெடுதலா என்பதை அவர் இன்னும் தெளிவாக்கிக் கொள்ளவில்லை என்று ஏற்படுகிறது.

இது மட்டும் அல்ல.

அரசியல் நிர்ணய சபைத் திட்டத்தை முஸ்லிம் லீக் ஒப்புக் கொள்ளச் செய்வதாக வைஸ்ராயிடம் வாக்குக் கொடுத்து விட்டு முஸ்லிம் லீக் பிரதிநிதிகளை இடைக்கால சர்க்காரில் சேரும்படி செய்தார்.

வைஸ்ராய் வேவல் அதைப் பற்றி இப்போது ஞாபகப்படுத்தியதற்கு "அரசியல் நிர்ணய சபையைத் தள்ளிப் போடவேண்டும்" என்கிறார்.

இதற்கு, பீஹாரில் உள்ள கலவர நிலைமையைக் காரணமாக எடுத்துக் காட்டி "பீஹாரில் அமைதியை ஏற்படுத்துவதே இப்போது முதன்மையான வேலை" என்கிறார்.

கிழக்கு வங்காளத்தின் நிலைமை பற்றி அவர் குறிப்பிடாதது ஒருபுறமிருக்கட்டும்.

பீஹார் கலவர நிலைமைக்காக அரசியல் நிர்ணய சபையை ஏன் ஒத்திப்போட வேண்டும்?

அரசியல் நிர்ணய சபையில் காங்கிரஸ் தலைவர்களும் முஸ்லிம் லீக் தலைவர்களும் சேர்ந்து உட்கார்ந்து தேசத்தில் நிரந்தர அரசியல் திட்டத்தைத் தயாரிக்க முனைந்தால், அது தேசமெங்கும் அமைதியை நிலைநாட்ட உதவியாயிருக்குமல்லவா?

அத்தகைய உதவிசெய்ய ஜனாப் ஜின்னாவுக்கு இஷ்டமில்லை யென்றல்லவா ஏற்படுகிறது?

ஜனாப் ஜின்னாவின் விருப்பத்துக்கு விரோதமாக முதலில் உத்தேசித்தபடியே டிசம்பர் 9ல் அரசியல் நிர்ணய சபை கூடப்போகிறது. வைஸ்ராய் வேவல் அப்படித் தீர்மானித்து அழைப்பும் அனுப்பிவிட்டார்.

அதில் ஜனாப் ஜின்னாவும் முஸ்லிம் லீக் பிரதிநிதிகளும் கலந்து கொள்ள மறுத்தால், முஸ்லிம் லீக் பிரதிநிதிகள் இடைக்கால சர்க்காரில் இருப்பதற்கும் நியாயமில்லாமற் போகும்.

இடைக்கால சர்க்காரிலிருந்து அவர்கள் விலகினால் தேசத்தில் ஏற்கெனவே உள்ள மனக் கசப்பு அதிகமாகும். விலகாவிட்டால் ஒரு பெரிய அரசியல் நெருக்கடி ஏற்பட்டுக் குழப்பம் உண்டாகும்.

[மேற்கண்டவாறு நாம் எழுதிய பிறகு, அரசியல் நிர்ணய சபையில் முஸ்லிம் பிரதிநிதிகள் கலந்துகொள்ள மாட்டார்கள் என்று ஜனாப் ஜின்னா அறிவித்து விட்டார். வைஸ்ராய் வேவல் இனி என்ன செய்யப் போகிறார் என்பது தெரியவில்லை.]

* * *

இப்படிப்பட்ட அபாயமான நிலைமையில் மீரத் காங்கிரஸ் கூடுகிறது.

சென்ற முப்பது வருஷ காலமாகத் தாய் நாட்டுக்கும் காங்கிரஸ் மகா சபைக்கும் இடைவிடாது தொண்டாற்றி வரும் ஆச்சாரிய கிருபளானியின் தலைமையில் கூடுகிறது.

அதிர்ஷ்டவசமாக, ஆச்சாரிய கிருபளானிக்கு ஆலோசனை கூறி உதவி செய்ய நமது ஒப்பற்ற காங்கிரஸ் மாபெருந் தலைவர்கள் இருக்கிறார்கள்.

பண்டித ஜவாஹர்லால், மௌலானா ஆஸாது, ஸர்தார் வல்லபாய், ராஜாஜி, ராஜேந்திர பிரஸாத் ஆகியவர்களைப் போன்ற மகத்தான தலைவர்களை ஏக காலத்தில் பெறும் பாக்கியம் எந்தக் காலத்திலும் எந்த தேசத்துக்கும் கிட்டியதில்லை.

இவர்கள் எல்லாருக்கும் மேலே மகாத்மா காந்தியும் இருக்கிறார்.

சுதந்திரக் கரையை நெருங்கியிருக்கும் காங்கிரஸ் கப்பலை மேற்சொன்ன மாபெருந் தலைவர்கள் எப்பேர்ப்பட்ட அபாயங்களிலிருந்தும் காப்பாற்றிப் பத்திரமாய்க் கரை சேர்ப்பார்கள் என்று நாம் நம்பி இருக்கலாம்.

# பம்பாயில் ரஸிகமணி

'சுபஸ்ரீ'

## 1 அறிமுகம் ★

மாலை மயங்கும் நேரம். பம்பாய் மாதுங்காவிலே ஒரு மூலைத் திருப்பம். 'குடு குடு' வென்று ஓட்டமும் நடையுமாய் வந்து கொண்டிருந்த ஒரு குள்ளமான ஆசாமி 'டணார்' என்று என்மேல் மோதிக் கொண்டு, பிறகு அதையும் பொருட்படுத்தாமல் விழுந்தடித்து ஓடினார். அந்தப் பேர்வழி வேறு யாருமல்ல. பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீ கந்தசாமி அவர்கள்தான்!

"நல்ல மனுஷர்! ஆளைக் கீழே தள்ளி விட்டுக் கேவலம் மரியாதைக்கு 'மன்னிக்கவும்' என்று கூடச் சொல்லாமல் ஓடுகிறாரே!" என்று எனக்குக் கோபமாயிருந்தது. ஒரே பாய்ச்சலில் அவரைத் தாவிப் பிடித்து நிற்கவைத்துப் பலவந்தமாகப் பேச வைக்க முயன்றேன். அவர் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க "மன்னிக்கணும்! ஒரு அவசர காரியமாகப் போகிறேன்........." என்று தடுமாறினார்.

"என்னய்யா அமர்க்களப் படுத்துகிறீர்? அப்படி என்ன தலைபோகிற காரியம்?" என்று கேட்டேன்.

"உங்களுக்கு விஷயம் தெரியாதா? பம்பாய்க்குக் கம்பர் வந்திருக்கிறாரே; கேள்விப்பட வில்லையா?" என்றார்.

இதைக் கேட்ட ஆச்சரியத்தினால் நான் திகைத்திருக்கையில் அவர் சடக்கென்று தம்மை விடுவித்துக் கொண்டு மீண்டும் ஓட்டம் பிடிக்கலானார். நானும் விடாமல் அவரைத் துரத்திக்கொண்டு சென்றேன். எங்கெங்கேயோ போய்க் கடைசியில் பம்பாய்த் தென்னிந்தியப் பிரமுகர்களில் ஒருவரான ஸ்ரீ எச். சிவராம கிருஷ்ணன் அவர்களின் வீட்டிற்குள் நுழைந்தோம். அங்கே முகப்பு அறையில் வீற்றிருந்த யாரோ ஒரு பெரியார் எங்களைக் கண்டவுடன் கைகூப்பினார். "யார் இந்த மகான்? கண்களிலே அறிவுக்கனல் பறக்கிறதே?" என்ற சிந்தனை என்னைக் குழப்பியது.

"நல்ல உயரம்; நல்ல பருமன்; களையான முகம்; தமிழ்ப் பண்புடன் திருகி விட்ட மீசை!" என்று யோகி சுத்தானந்த பாரதியார் அவர்கள் யாரைப் பற்றி எழுதியிருந்தாரோ, அதே அறிஞர்தான் எங்களை மேற்கண்டபடி வரவேற்றவர் என்று அறிந்தேன். அருகிலிருந்த அன்பர் ஒருவர் "இவர்தான் ரஸிகமணி டி.கே.ஸி!" என்று எங்களுக்கு அவரை அறிமுகப்படுத்தி வைத்தார். அந்த க்ஷணமே நான் சுத்தானந்தர் சொன்னது முற்றிலும் உண்மை என்பதை உணர்ந்து கொண்டேன். கலைஒளி வீசும் அவர் முகத்திற்கே அழகு கொடுக்கும் அந்த அடர்த்தியான மீசையுடன் தமிழ்ப் பண்பு திருகிவிடப் பட்டிருப்பது தெளிவாகப் புலப்பட்டது.

ஆனால் அதை முற்றிலும் அனுபவித்து மகிழ்வதற்குள் எங்கள் காரியதரிசி கந்தசாமி ஆரம்பித்து விட்டார் :—

"நான்தான் பம்பாய்த் தமிழ்ச் சங்கக் காரியதரிசி. தாங்கள் இங்கே தங்கியிருக்கும் வரையில், தங்களுக்கு ஓயாமல் தொந்தரவு கொடுக்கும்படி சங்கம் என்னை நியமித்திருக்கிறது. வருகிற சனிக்கிழமை யன்று ஒரு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்கப் போகிறோம். பேசாமல் வந்து தாங்கள் அதைப் பெற்றுக்கொள்ள வேண்டும். தவிர, கல்கி அவர்களும் வரப்போகிறாராம். அவரும் விழாவில் கலந்துகொள்ள வேண்டும். இது எங்கள் வேண்டுகோள்."

காரியதரிசி இப்படிக் கேட்டுக் கொண்டவுடன் ரஸிகமணி அவர்கள் சிறிதும் ஆட்சேபிக்காமல் அழைப்பை ஏற்றுக் கொண்டார்.

வெளியே வந்தவுடன், "பலே, கந்தசாமி!" என்று சொல்லி அவர் முதுகில் ஒரு 'ஷொட்டு' கொடுத்தேன். பிறகு ரஸிகமணியின் பிரசங்கங்களைக் கேட்பதற்காக என் காதுகளைத் தீட்டித் தயார் செய்துகொள்ள ஆரம்பித்தேன்.

## 2. ஆரம்ப விழா ★

பழைய காலத்தில் தமிழ்க் கொடியானது உலகின் பல பாகங்களில் பறந்ததாம். சாவகத் தீவிலே முழங்கிய தமிழொலி, ஆழ்கடல் அலைகளின்

பெரிளைச்சலையும் அமுக்கிவிட்டு வட தென் திருவங்களிலேகூட எதிரொலித்தது என்கிறார்கள் சில ஆராய்ச்சியாளர்கள். இவையெல்லாம் எந்த மட்டும் உண்மையோ நாம் அறியோம்.

ஆனால் இன்று தமிழ் நாட்டிற்குப் பல காதங்களுக்கு அப்பாலிருக்கும் பம்பாய் நகரத்திலே தமிழ்க் கொடி பறக்கிறது என்பது மட்டும் கண் கூடாகக் காணும் உண்மை. இத்தகைய பெருந்தொண்டை அலுப்பின்றிச் செய்து வருகிறது பம்பாய் தமிழ்ச் சங்கம். ஆண்டுதோறும் கம்பர் உற்சவம், வள்ளுவர் திருநாள், பாரதி விழா போன்ற கொண்டாட்டங்களை விமரிசையாக நடத்தி வருகிறது.

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்திற்கு ரஸிக மணியுடன் நீண்ட நாட்களாகவே தொடர்பு உண்டு. ஆரம்பத்திலிருந்தே ரஸிகமணி சங்கத்தின் போஷகர். ஒவ்வொரு வருடமும் கம்பர் விழாக் கொண்டாட்டத்தின் பூர்வாங்க வேலைகளைத் தொடங்குவதற்கு முன்பே சங்கத்தார் டி.கே.சி. அவர்களுக்கு "இந்த வருடமாவது தாங்கள் தயவுசெய்து வந்திருந்து நடத்தி வைக்கக் கூடாதா?" என்று கடிதங்களுக்குமேல் கடிதங்கள் போட்டு ஏமாறுவது வழக்கம். கடைசியில் "இனிக் கம்பர் விழாவுக்கு டி. கே. சி.யை அழைப்பதில்லை; அவர் வரும்பொழுது கம்பர் விழாவை வைத்துக் கொள்வோம்" என்ற முடிவிற்கு வந்து பொறுமையாகக் காத்துக்கொண்டிருந்தார்கள். எனவே, ஸ்ரீ டி. கே. சி. தற்செயலாகப் பம்பாய்க்கு வந்திருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டவுடன் காரியதரிசியும் காரியவாதியுமான கந்தசாமி அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வதற்கு ஏற்பாடு செய்தார்.

அதன் விளைவாக நாளது நவம்பர் மாதம் 2௳ சனிக்கிழமை யன்று மாலை, மாதுங்கா தென்னிந்திய கல்விக் கழகக் கட்டிட ஹாலில் ஒரு பெரிய கூட்டம் திரண்டது. காரணமற்ற சமயச் சண்டையினால் இப்போது பம்பாய் நகரத்திலே நாலு பேருக்கு மேல் கூடிப் பேசக்கூடாது என்ற சட்டம் அமுலில் இருந்து வருகிறது. ஆனால் அன்று கலையின் பெயரால் குழுமியவர்கள் நகர நிலைமையைப் பொருட்படுத்தவில்லை. பம்பாயின் பல பாகங்களி லிருந்தும் தமிழர்கள் ஆயிரக் கணக்கிலே வந்து கூடினர்.

பம்பாய்த் தமிழர்களிடமிருந்து பிரவாகித்த அன்பு வெள்ளத்திலே திகைத்து விட்டார், மேடைமீது அமைதியாக வீற்றிருந்த ரஸிக மணி அவர்கள். அவருக்கு அருகாமையில் தமிழ்ச் சங்கத் தலைவரும், தென்னிந்தியக் கல்வி நிலையத்தின் பிரின்ஸிபாலுமான ஸ்ரீமான் ஸ்ரீனிவாசய்யர், உபதலைவர் ஸ்ரீ சாமி அய்யர், ஸ்ரீமதி ஆர். வி. சாஸ்திரி இவர்களுடன் மற்றும் பல தென்னிந்தியப் பிரமுகர்கள் அமர்ந்திருந்தனர். கல்கி ஆசிரியர் மட்டும் வேண்டுமென்றே பின் வரிசையில் போய் உட்கார்ந்து கொண்டார்.

விருந்தினருக்குத் தமிழ்ச் சங்கம் மாலை சூடி மகிழ்ந்தது. பிறகு இந்நகரிலுள்ள தமிழர் பொது ஸ்தாபனங்கள் பலவற்றின் சார்பாக மாலைகள் வந்து விழுந்தன. பம்பாயிலுள்ள தமிழ் எழுத்தாளர்களின் சார்பாகவும் மாலை சூட்டப்பட்டது ஒரு விசேஷச் செய்தி!

மாலை சூட்டும் வைபவம் முடிந்தவுடன் சங்கத் தலைவர் ஸ்ரீ ஸ்ரீனிவாச அய்யர் ரஸிக மணி அவர்களை பம்பாய் வாசிகளுக்குப் பின்வருமாறு அறிமுகப்படுத்தி வைத்தார்: "இராமாயணத்தைத் தமிழில் எழுதிய பெருமை கம்பனைச் சாரும். ஆனால் கம்பன் கவிதையை ஒவ்வொரு தமிழனிடையேயும் பரப்பி, யாவரும் ரசிக்கச் செய்த தனிப்பெருமை ரஸிகமணி அவர்களுக்குத்தான் உரியது. 'மண் பானைகளைக் குயவன் சுண்டிப் பார்ப்பது போல்', ஒவ்வொரு கவியையும் ஆராய்ந்து, அதன் ரஸத்தை அப்படியே உலகின் பல பாகங்களிலிருக்கும் தமிழர்களுக்குக் 'கல்கி' மூலமாகப் புகட்டி வருகிறார்.

"ராமாயணம் அல்லாத வேறு பல பண்டைத் தமிழ் நூல்களையும் கற்றுத் தேர்ந்த மேதை ரஸிகமணி. தாம் அனுபவித்த தமிழ்ச் சுவையைத் தமிழர்களுக்கு எடுத்து ஊட்டுவதில் வல்லவர். அதற்கு அவருடைய 'இதய ஒலி' தக்க சான்று. 'முத்தொள்ளாயிரம்' என்ற நூலில் மறைந்தொழிந்தவை போக மீதியுள்ள பாக்களைச் சேகரித்து விளக்க உரையுடன் வெளியிட்டது தமிழுக்கு அவர் செய்த பெருந்தொண்டு. இத்தகைய ஒரு பெரியார் இன்று நம்மிடையே விஜயம் செய்திருப்பது பம்பாய்த் தமிழர்கள் செய்த புண்ணியத்தினால்தான்."

(அடுத்த இதழில் தொடரும்)

# கப்பலோட்டிய தமிழன்

நானது நவம்பர் 18-ல் தமிழ் நாட்டின் பல இடங்களிலும் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களின் தினத்தைக் கொண்டாடினார்கள். பலரும் பலவிதமாய்க் கொண்டாடினார்கள். தமிழ்ப்பண்ணையாளர்கள் அந்தப் புனித தினத்தைக் கொண்டாடிய விதம் மிகச் சிறந்தது என்று சொல்ல வேண்டும். வ. உ. சி. தினத்தில் இந்த அருமையான, அழகான புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.



ம. பொ. சிவஞான கிராமணியார்

புத்தகத்தின் அட்டையில் தேசியக் கொடி பறக்கும் பாய்மரக் கப்பல் கடலைக் கிழித்துக் கொண்டு செல்லும் காட்சி தத்ரூபமாய்க் காட்சியளிக்கிறது. புத்தகத்தின் உள்ளேபோ ஒவ்வொரு பக்கத்திலும் ஒவ்வொரு வரியிலும் வ. உ. சிதம்பரனார் காட்சியளிக்கிறார். தமிழ் நாட்டின் அந்த ஆதி தேசபக்த வீரர் நம்மோடு கைகுலுக்குகிறார்; நம்முடைய தோளோடு தோள் சேர்த்துக் குலாவுகிறார். நம்மோடு சேர்ந்து இந்த நாட்டின் பரிதாப நிலையை எண்ணிக் கண்ணீரும் வடிக்கிறார்; கோபத்தினால் அவருடைய மீசை துடிக்கும் போது நம்மில் மீசை யில்லாதவர்களுக்கும் மீசை துடிக்கத்தான் செய்கிறது. கண்கள் கோவைப் பழம்போல் சிவந்து விடுகின்றன. அவர் கப்பல் விடும்போது நாமும் கப்பல் விடுகிறோம். அவர் சிறைக்குச் செல்லும் போது நாமும் உடன் செல்கிறோம். அவர் செக்குச் சுற்றும்போது நாமும் சுற்றுகிறோம்; அல்லது நமது தலை சுற்றுகின்றது. அவர் களைத்துச் சோர்ந்து மூர்ச்சித்து விழும்போது நாமும் ஏறக்குறைய நினைவை இழந்து விடுகிறோம்.

ஸ்ரீ வ. உ. சிதம்பரனார் கவிதை எழுதும் போது — மோனை எதுகைப் பொருத்தம் பார்த்து அகவற்பாவோ வெண்பாவோ இயற்றும் சமயத்திலே மட்டும் — அவரோடு நாம் ஒன்றாக முடிவதில்லை. அவர் வேறு நாம் வேறு என்பது நினைவுவந்து சற்று எட்டி நின்று அவர் எழுதுவதைப் பார்க்கிறோம்.

★

ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியாருக்கு ஸ்ரீ வ. உ. சி. அவர்களுடன் நேரில் பழக்கம் உண்டா, சிநேகம் உண்டா என்பதெல்லாம் நமக்குத் தெரியாது. இந்தப் புத்தகத்திலிருந்தும் வெளியாகவில்லை. ஆனால் வ. உ. சி. அவர்களோடு கிராமணியாருக்கு ஆன்மநேய ஒருமைப்பாடு பரிபூரணமாக அமைந்திருந்தது என்பது இந்த நூலிலிருந்து நன்கு வெளியாகிறது. வாழ்நாளெல்லாம் உடன் இருந்து பழகிய ஆத்ம சிநேகிதர்கள்கூட ஒருவருடைய வரலாற்றை இதைக் காட்டிலும் சிறந்த முறையில் எழுத முடியாது. வ. உ. சிதம்பரனாரின் வாழ்க்கையிலும் குணவிசேஷங்களிலும் இதய உணர்ச்சிகளிலும் கிராமணியார் தோய்ந்து அநுபவித்து இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார்.

"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்"

என்னும் பொய்யாமொழிக்கு, ஸ்ரீ சிவஞான கிராமணியார் எழுதியுள்ள வ. உ. சி. வரலாறு மிகச் சிறந்த சான்றாக அமைந்திருக்கிறது.

★

நாமக்கல் கவிஞர் இந்த நூலுக்கு முப்பத்தாறு பக்கங் கொண்ட ஒரு முன்னுரை தந்திருக்கிறார். முதலில் பக்கத்தை மட்டும் பார்க்கும் போது, "ஏது? முன்னுரை புத்தகத்தையே மறைத்துவிடும் போலிருக்கிறதே!" என்று தோன்றுகிறது. முன்னுரையைப் படித்துப் பார்த்தவுடனே "இல்லை; புத்தகத்துக்கு முன்னுரை விளக்குப் போட்டுக் காட்டுகிறது!" என்று முடிவு செய்கிறோம்.

நாமக்கல் கவிஞர் ஒரு வரிகூடக் கவிதை எழுதா விட்டாலும், அவர் சிறந்த வசன கர்த்தாவாகத் திகழுவார் என்று அவருடைய "என் கதை"யைப் படித்ததும் நமக்கு அபிப்பிராயம் ஏற்பட்டது. இந்த நூலின் முன்னுரை அந்த அபிப்பிராயத்தை ஊர்ஜிதப்படுத்துகிறது. கல்கத்தா காங்கிரஸுக்குத் தனி ரயிலில் பிரயாணம் செய்தபோது வ. உ. சி. ஒவ்வொரு வண்டியாக ஏறி இறங்கிப் பிரதிநிதிகளுடன் பேசி அவர்களைக் காந்தி கட்சியிலிருந்து திலகர் கட்சிக்குத் திருப்ப முயன்ற சம்பவம் நம் கண் முன்னால் நடைபெறுவது போல் தோன்றுகிறது. மெயில் வண்டியை நிறுத்துவதற்காக வ. உ. சி. நடத்துகிற முயற்சி அவருடைய குணவிசேஷத்தை நன்கு விளக்குகிறது. ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரையும் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரையும் ஒத்திட்டு எழுதியிருப்பது ஓர் அற்புதம். அந்தச் சில வரிகளில் நமக்கு அந்த இரண்டு பெரியார்களையும் நாமக்கல் கவிஞர் படம் பிடித்து நன்றாக இனம் காட்டியிருக்கிறார்.

ஸ்ரீ வ. உ. சிதம்பரனாரைத் தமிழ்நாடு என்றும் மறக்க முடியாது. அவரை மறக்காமலிருப்பதற்குரிய ஞாபகச் சின்னங்கள் ஒன்று இரண்டல்ல, பற்பல ஏற்படவேண்டும். இந்தக் "கப்பலோட்டிய தமிழன்" என்னும் அருமையான நூலும் அந்தப் பெரியாருக்கு ஒரு சிறந்த ஞாபகச் சின்னமாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

[ஆசிரியர்: ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியார்; முன்னுரை: நாமக்கல் கவிஞர் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை; பிரசுரம்: தமிழ்ப்பண்ணை, தியாகராய நகர், சென்னை; விலை: ரூ. 1—8—0.]

# வட்டமேஜை

நெல்லிக்குப்பம்
10-11-1946

ஆசிரியர் அவர்களுக்கு,

சமீபகாலத்தில் வெளிவந்த சென்னை கல்வி இலாகா உத்தரவுகளால் பெரிதும் அதிர்ச்சியடைந்த எயிடட் பாடசாலைகளின் மானேஜர்கள் சார்பில் நான் தங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன். மேற்படி கல்வி இலாகா உத்தரவுகள் வருமாறு :—

1. இதுவரையில் மிகவும் திருப்திகரமான தேர்ச்சியைக் காட்டும் எயிடட் பாடசாலைகளுக்கு அந்தப் பாடசாலைக்குண்டான கல்வி கிராண்டில் (Teaching grant) அதிக பக்ஷம் 50% வரை Efficiency increment of grant கொடுத்து வந்தார்கள். இப்போது அம்மாதிரியான கிராண்டு பூராவும் நிறுத்தி விடும்படி இவ்வுத்தரவு அறிவிக்கிறது. இதன் விளைவு எயிடட் பாடசாலைகளை மூடிவிடுவதில்தான் முடியும். தற்போது இருக்கும் ஆரம்பக் கல்வி ஸ்தாபனங்களில் அதிக தேர்ச்சியையும் சிரத்தையையும் காட்டுவது எயிடட் பள்ளிகளே. இது யாவரும் அறிந்த விஷயம். மேற்படி பாடசாலைகளுக்கு Efficiency increment கொடுத்து வந்ததால்தான் இது விஷயம் சாத்தியமாகிறது என்பதை மந்திரிகள் உட்பட எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஏற்கனவே இவ்வித பாடசாலைகளுக்கு ஊதியம் மிகக் குறைவு. அதிலும் இவ்விதமான நடவடிக்கைகளை மேற்கொண்டால் நாட்டின் கல்வி நலனையே பெரிதும் பாதிப்பதாகும். எயிடட் பாடசாலைகளின் தேர்ச்சியும் பயனும் அதிகரிக்க Efficiency increment கொடுப்பது மிக அவசியம்.

2. மேற்படி பாடசாலைகளின் நிர்வாகச் செலவுகளுக்கு ஆசிரியர்களின் ஊதியத்தில் 15% பிடிக்கும்படி உத்தரவு இருந்து வந்தது. சமீபத்தில் அந்த 15%யும் சர்க்கார் தாங்களே கொடுப்பதாகவும், உபாத்தியாயர்கள் சம்பளத்தில் பிடிக்கக் கூடாதென்றும் உத்தரவு வரப் போவதாக வதந்தி உலாவி வந்தது. ஆனால் பாடசாலைக்குச் சம்பள வரவு இல்லாமலும், நிர்வாகம், கட்டடம், மேஜை, நாற்காலி முதலிய பள்ளிக்கூடத்திற்கு வேண்டிய மிக முக்கியமான சாமான்கள் சரியான நிலைமையில் இருந்தால்தான் மேற்படி 15% கொடுக்கக் கூடும் என்று கல்வி இலாகாவின் இரண்டாவது உத்தரவு கூறுகிறது. மானேஜ்மெண்டுகளுக்குள்ள செலவையும் நிர்வாகக் கஷ்டங்களையும் பார்க்கும்போது மேற்படி உத்தரவு பெரிதும் வருந்தத்தக்கது. சரியான நிலைமையில் நடத்தும் பாடசாலைகளுக்கு நிர்வாகச் செலவுகளுக்காக 15% கிரமமாகக் கொடுத்தாலும் போதாது என்பதைக் கீழ்க்கண்ட மிகக் குறைவான புள்ளி விவரங்களால் தெரிந்து கொள்ளலாம்.

நான்கு உபாத்தியாயர்கள் உள்ள கிராண்டு பாடசாலையின் ஒரு வருஷத்திய மிகக் குறைவான செலவும், அதற்கு வரவும் :

| விவரம் | ரூ. அ. பை. |
|---|---|
| நடுத்தரமான ஊரில், விளையாடுமிடம், தோட்டம், முதலிய வசதிகள் உள்ள கட்டடத்துக்கு வாடகை | 120—0—0 |
| ரிஜிஸ்தர்கள் செலவு | 20—0—0 |
| ஸ்டேஷனரிகள் | 25—0—0 |
| பெருக்கும் கூலி | 24—0—0 |
| குடி தண்ணீர் சப்ளை | 12—0—0 |
| கட்டடத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளச் செலவு | 12—0—0 |
| லைப்ரரிக்குப் புஸ்தகங்கள் | 5—0—0 |
| போதனைக் கருவிகள் | 12—0—0 |
| மரச் சாமான்கள் ரிப்பேர் | 12—0—0 |
| காவல்காரன் சம்பளம் | 12—0—0 |
| உபாத்தியாயர்களுக்குப் பாட புத்தகங்களின் பிரதிகள் | 10—0—0 |
| வருஷாந்திர விழா முதலிய விசேஷங்கள் | 10—0—0 |
| மொத்தம் செலவு | 274—0—0 |
| கவர்ன்மெண்டாரால் 15% மானேஜ்மெண்ட் கிராண்டு மூலம் வரவு. (4 உபாத்தியாயர்களுடைய சம்பளம் ரூ. 16 × 12 × 4 = ரூ. 768ல் 15% விகிதம்) | 115—0—0 |
| வரவுக்கு மேல் செலவு | 159—0—0 |

ஆகையால், சர்க்கார் இதைக் கவனித்து எவ்வித நிபந்தனைகளையும் விதிக்காமல் எல்லாப் பாடசாலைகளுக்கும் 25% மானேஜ்மெண்டு கிராண்டு கொடுக்க வேண்டுமென்று கோருகிறோம்.

தவிர எயிடட் பாடசாலைகளில் ஆசிரிய மானேஜர் பாடசாலை என்றும், தனி மானேஜர் பாடசாலை என்றும் இரு வகை யுண்டு. அதில் ஆசிரியரே மானேஜரா யிருக்கும் பாடசாலையின் மானேஜர் எப்போதும் அருகிலிருப்பதால் பாடசாலை வேலையைக் கண்காணிக்க மிகவும் சௌகரியம் உண்டு. ஆதலின் இத்தகைய பாடசாலைகளே மிகத் தேர்ச்சி காட்டுதல் கூடும். ஆனால் அதிகாரிகளில் சிலரும் கல்வி மந்திரியாரும் இத்தகைய பாடசாலைகளை ஒழித்து, பாடசாலைகளைத் தனி நபர் அல்லது கமிட்டிகளின் நிர்வாகத்தில் விடுவதற்கு இஷ்டப்படுவதாகத் தெரிகிறது. இவ் விஷயத்தையும் கனம் மந்திரியார் சிந்திக்கும்படி கோருகிறோம்.

இங்ஙனம்,

டி. கே. ரங்கநாதன்

காரியதரிசி,
ஆசிரியர் மானேஜர்கள் சங்கம்,
கடலூர்.

# ஒரு பழைய சம்பவம்

★ ★ ★



சமீபத்தில் இந்தியா தேசத்தின் இரு பெரும் கிழவர்கள் காலஞ் சென்றார்கள். ஒருவர் ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர்; இன்னொருவர் பண்டித மதன்மோகன மாளவியா. இந்த இரு பெரியாரும் சம்பந்தப்பட்ட ஒரு ரஸமான சம்பவம் சென்னையில் முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் நடந்தது.

காசியில் ஹிந்து விசுவ வித்தியாலயத்தை மகத்தான முறையில் ஸ்தாபனம் செய்வதற்காகப் பண்டித மாளவியா நாடெங்கும் யாத்திரை செய்து நன்கொடை திரட்டி வந்தார். மேற்படி கைங்கரியத்துக்குப் பல சுதேச மன்னர்களும் பெரிய பிரபுக்களும் லட்சக் கணக்கில் நன்கொடை அளித்தார்கள். இதைப் பார்த்து விட்டுத்தான் காந்தி மகான் மாளவியாவுக்கு "யாசக ராஜா" என்று பட்டம் சூட்டினார்.

மேற்படி யாசக யாத்திரையின்போது மாளவியாஜி சென்னைக்கும் வந்திருந்தார். சென்னையில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் பலர் பெரிய பெரிய நன்கொடைகளை அளிக்க ஒப்புக் கொண்டனர். அவர்களுடைய பெயர்களும் தொகைகளும் அறிவிக்கப்பட்டு வந்தபோது, "ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் ரூபாய் ஐந்நூறு" என்று அறிவிக்கப்பட்டதும், கூட்டத்திலே சிலர் "வெட்கம் வெட்கம்" என்று கத்தினார்கள். ஸர் சிவஸ்வாமி ஐயர் பெரிய பதவியிலிருந்து பெரும் பணம் சம்பாதித்தவர். அவருக்குப் பிள்ளை குட்டிகளும் இல்லை. அப்படியிருக்க, அவர் இவ்வளவு சிறு தொகை நன்கொடை யளித்தது கூட்டத்தில் சிலருக்குக் கோபத்தை உண்டாக்கிய படியால்தான் "வெட்கம்!" என்ற குரல் எழுந்தது.

உடனே, பண்டித மாளவியாஜி நன்கொடை ஜாபிதா வாசிப்பதை நிறுத்தி விட்டு, "வெட்கம்!" என்ற கூச்சல் வந்த திக்கை நோக்கி ஒரு நீண்ட பிரசங்கம் செய்யத் தொடங்கினார். ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் தாம் பிறந்த ஊராகிய திருக்காட்டுப் பள்ளியில் தம் சொந்தப் பொறுப்பில் ஒரு ஹைஸ்கூல் நடத்தி வருவதையும் அதற்காகத் தமது சொத்தில் பெரும் பகுதியை அளித்திருப்பதையும் பாராட்டி எடுத்துச் சொன்னார். நமது தேசத்துப் பெரியோர்களை இப்படியெல்லாம் அவமரியாதை செய்வது நமக்குத்தான் வெட்கம் என்றும், இந்தியாவின் பண்பாட்டுக்கே விரோதம் என்றும் சாட்டை வாங்கினார்!

மேற்படி சம்பவத்துக்குப் பிறகு ஸர் சிவஸ்வாமி ஐயர் நீண்ட காலம் ஜீவித்திருந்தார். ஆயினும் அவருடைய தர்மஞ் செய்யும் முறையிலிருந்து எள்ளளவும் பிறழவில்லை. பசித்து வந்தவர்களுக்குச் சாப்பாடு கூட அவர் போட மாட்டார் என்று சொல்வதுண்டு. ஆனால் முக்கியமான சில ஸ்தாபனங்களுக்குப் பெருதவி செய்து வந்தார். அப் பெரியார் தமது மரண சாஸனத்தில் மயிலாப்பூர் பெண்கள் பள்ளிக்கூடத்துக்கு மூன்று லட்சம் ரூபாய் எழுதி வைத்திருக்கிறார் என்னும் செய்தி தினப் பத்திரிகைகளில் வெளியாகி யிருக்கிறது.



# புது டில்லியில் தமிழ் நாடகம்

சிலருக்கு அதிர்ஷ்டம் அவசரமாக மோதிக் கொண்டு வந்து அடிக்கிறது. வேறு சிலருக்குச் சாவகாசமாக அதிர்ஷ்டம் வருகிறது. "கள்வனின் காதலி"க்கு அவ்விதம் சாவகாசமாக அதிர்ஷ்டம் தேடிக் கொண்டு வந்திருக்கிறது என்பது புதுடில்லியிலிருந்து சென்ற வாரத்தில் வந்த செய்திகளால் தெரிய வந்தது.

திருச்சி நேஷனல் காலேஜ் வைரவிழா நிதிக்கு ஏதோ சக்தியானுசாரம் பணம் வசூலித்துக் கொடுக்க வேண்டுமென்று புதுடில்லித் தமிழர்கள் சிலர் உத்தேசித்தார்கள். இதற்காகக் "கள்வனின் காதலி" என்னும் கதையை நாடகமாக நடத்துவதென்று நிர்மாணித்தார்கள். புதுடில்லியில் நாடகம் நடத்தினால் 400 பேருக்கு மேல் உட்கார்ந்து பார்ப்பதற்கு இடம் கிடையாது. எனவே, இம்மாதம் 9உ 10உ இரண்டு தினங்களும் அதே நாடகத்தை நடத்துவது என்று முடிவு செய்தார்கள். கலை மூலமாக அவர்கள் செய்ய உத்தேசித்த இந்தக் கல்வித் தொண்டுக்கு, தேசிய சர்க்காரில் 'கல்வி—கலை' மந்திரியான ராஜாஜி அவர்களை அக்கிராசனம் வகிக்க வேண்டுமென்று கோரினார்கள். அதில் வெற்றியும் பெற்றார்கள்.

எதிர்பாராத விதமாக மேற்படி முயற்சிக்கு ஒரு எதிர்ப்புக் கிளம்பிற்று. டில்லி நகரில் முஸ்லிம் லீக்கின் சார்பாக நடைபெறும் "டான்" (Dawn) பத்திரிகையில் "கோப மூட்டல்" (Provocation) என்ற தலைப்பில் ஓர் உபதலையங்கம் வெளியாயிற்று. மேற்படி நாடகத்தில் குவாதே ஆஜம் ஜின்னாவையும் மற்ற முஸ்லிம் தலைவர்களையும் அவமதிக்கும்படியான ஹாஸ்ய கட்டங்கள் வருவதாகவும், இந்திய சர்க்காரின் உத்தியோகஸ்தர்கள் இத்தகைய கேலி நாடகத்தில் எப்படி சம்பந்தப்படலாம் என்றும், இந்த நாடகத்திற்கு ராஜாஜி தலைமை வகிப்பது எல்லாவற்றிலும் அதிசயமான விஷயம் என்றும், ராஜாஜி இதற்கு என்ன சொல்லப் போகிறார் என்பதை எதிர் பார்த்துக் கொண்டிருப்பதாகவும் அந்த உப தலையங்கத்தில் எழுதியிருந்தது.

ராஜாஜி மேற்படி உபதலையங்கத்துக்கு ஒரு சுருக்கமான பதில் எழுதினார். "நாடகத்தில் முஸ்லிம்களையோ முஸ்லிம் தலைவர்களையோ அவமதிக்கும் விஷயம் எதுவும் இல்லை" என்று நாடகம் நடத்துகிறவர்கள் தமக்கு உறுதி கூறியிருப்பதாகத் தெரியப்படுத்தினார். அதை மேற்படி பத்திரிகை 'மகிழ்ச்சி'யுடன் ஒப்புக்கொண்டு பிரசுரித்தது.

"கள்வனின் காதலி" என்னும் கதையைப் படித்தவர்கள் மேற்படி கதைக்கும் குவாதே ஆஜம் ஜின்னாவுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லையென்பதை அறிவார்கள். "கோகுலாஷ்டமிக்கும் குலாம் காதருக்கும், ரம்ஜானுக்கும் ராமசாமிக்கும் என்ன சம்பந்தம்?" என்று சொல்வதுண்டு. "கள்வனின் காதலி" கதைக்கும் ஜனாப் ஜின்னா சாயபுவுக்கும் அவ்வளவு சம்பந்தம்கூடக் கிடையாது. ஆயினும் வந்த நல்ல காரியம் சம்பந்தமாகவும் ஏதாவது ஒரு விஷமம் செய்துவைக்கச் சிலர் காத்துக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா? புதுடில்லியிலும் அப்படிப்பட்ட பிரகிருதிகள் உண்டு என்பது மேற்படி சம்பவத்திலிருந்து வெளியாயிற்று.

இவ்விதமாக, "கள்வனின் காதலி" என்னும் தமிழ்க் கதைப் புத்தகம் "டான்" பத்திரிகையின் உப தலையங்கத்துக்கு விஷயமாகும் அதிர்ஷ்டத்தைப் பெற்றது. ஆனால் அது அதிர்ஷ்டமா அல்லது துரதிர்ஷ்டமா என்பது பற்றி அபிப்பிராய பேதம் ஏற்படுவதற்கு இடம் உண்டு.

எனினும், 9உ 10உ இரண்டு நாட்களிலும் "கள்வனின் காதலி" பெரிய பாக்கியசாலி ஆனாள் என்பதைப் பற்றி அபிப்பிராய பேதத்துக்கு இடமில்லை. நாடகம் அவ்வளவு வெற்றிகரமாக நடந்தது என்றும், நாடகத்தை நடித்தவர்கள் பார்த்தவர்கள் அனைவருக்கும் அது அளவற்ற



மகிழ்ச்சியைத் தந்தது என்றும் புதுடில்லியிலிருந்து வந்திருக்கும் பல விவரங்களும் ஒருமுகமாகக் கூறுகின்றன.

அந்த விவரங்களில் எதைப் பிரசுரிப்பது, எதை விடுவது என்ற நெருக்கடியான பிரச்னை ஏற்பட்டிருந்த சமயத்தில், நல்லவேளையாக நமது ராணிப்பேட்டை தேசத் தொண்டர் ஸ்ரீ கே. ஆர். கல்யாணராமய்யரின் கடிதம் ஒன்று கிடைத்தது. இந்த மனுஷர், பாருங்கள், ஏதோ சொந்தக் காரியமாகப் புதுடில்லி சென்றவர் மேற்படி நாடகத்துக்குப் போய்ப் பார்த்தார். பார்த்ததோடு அல்லாமல் ஒரு சுருக்கமான விமரிசனமும் அனுப்பி மேலே சொன்ன நெருக்கடியான பிரச்னையைத் தீர்த்து வைத்திருக்கிறார்.

"கள்வனின் காதலி" அடைந்த அதிர்ஷ்டங்களில் மிகவும் முக்கியமானது, ராஜாஜி மேற்படி நாடகத்துக்குத் தலைமை வகித்ததுதான். ராஜாஜி சாதாரணமாகத் தொடர் கதைகளைப் படிப்பதில்லை. "கள்வனின் காதலி"யையும் படித்ததில்லை. மேற்படி கதை எழுதப்பட்டு ஏறக்குறையப் பத்து வருஷத்துக்குப் பிறகு ராஜாஜியின் கவனத்தைக் கவரும் பாக்கியம் அதற்கு இப்போது கிடைத்தது. நாடகம் பார்த்தபிறகு ராஜாஜி எழுதியுள்ள கடிதம் வருமாறு:—

டில்லி, 12-11-46

இந்த ஊர்த் தமிழர்களின் நாடகக் கழகம் மிகவும் நன்றாக உங்கள் கதையை நடித்து வெற்றிகரமாகவே முடித்தார்கள். இரண்டு நாள் நடத்தினார்கள். இரண்டு நாளும் நான் இருந்து பார்த்துக் கூட்டத்தில் சொற்பொழிவும் நிகழ்த்தினேன்.

நடித்தது ரொம்ப சரியாக இருந்தது. என்னவும் ஒழுங்குக் குறைவு இருக்கவில்லை. துளிக்கூடத் தவறு இல்லாமல் காதல் நாடகம் என் மனதுக்குத் திருப்தியாக நடத்துவது சிரமம். ஆயினும் அதை இந்தக் கழகத்தார் நடத்தி முடித்தார்கள்.

'கள்வனின் காதலி' கதையை நான் பிரசுரமானபோது படிக்கவில்லை. இப்போதுதான் கதை இன்னதென்று பார்த்தேன். ரொம்ப நன்றாக இருந்தது. டி. கே. சி. பார்த்திருந்தால் ரொம்ப சந்தோஷப்பட்டிருப்பார்கள்; பேசியுமிருப்பார்கள். சி. ஆர்.

இப்படியாக ராஜாஜியின் பாராட்டு தலைப் பெறும் முறையில் மேற்படி நாடகத்தை நடத்தி ஒரு சிறந்த தேசிய கல்வி ஸ்தாபனத்துக்குப் பொருள் உதவியும் செய்த புதுடில்லி நண்பர்களுக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நாடக விளம்பரப் புத்தகத்தில், நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர் 12 பேரின் பெயர்களும், நடிகர்கள் 16 பேரின் பெயர்களும், மற்றும் கதையை நாடகமாகத் தயாரித்தது முதற் கொண்டு நாடக மேடை ஏற்பாடுகள், பின்னணிச் சங்கீதம் ஆகியவை வரையில் உதவி செய்தவர்கள் 34 பேரின் பெயர்களும் காணப்படுகின்றன. இவர்களைத் தவிர டிக்கட் விற்பனை முதலிய காரியங்களில் உதவி செய்தவர்களும் இருக்கிறார்கள். எல்லாருக்கும் சேர்த்து (பிரசங்கங்களில் சொல்வதுபோல்) என் சார்பாகவும் 'கல்கி' சார்பாகவும் நன்றி செலுத்துகிறேன். பார்க்கப் போனால் நன்றி செலுத்துவதென்பதே அவசியமில்லைதான்! டில்லித் தமிழர்கள் எவ்வளவோ சந்தோஷத்துடனும் உற்சாகத்துடனும் செய்த உத்தமமான தொண்டுக்கு நாம் எதற்காக நன்றி செலுத்தவேண்டும்?

# கள்வனின் காதலி: விமரிசனம்

[கே. ஆர். கல்யாணராம ஐயர்]

இந்தியாவின் சரித்திரத்தில் முதன் முதலாக நடக்கும் சுதந்திர ஆட்சியைக் கண்டு களிக்க வேண்டுமென்ற ஆசை எனக்கு நெடுநாளாக இருந்தது. எனவே டில்லிக்குப் போக ஏற்பட்ட சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டேன். இரு நண்பர்களுடன் விமானத்தில் பறந்து 8—11—46ல் டில்லி சேர்ந்தேன்.

மறு தினம் காலை "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையைப் படித்தேன். அன்று மாலை ஸவுத் இண்டியா கிளப் மண்டபத்தில் ராஜாஜி தலைமையில் 'கல்கி' எழுதிய கதையான கள்வனின் காதலி நாடகம் நடக்கிறது என்ற செய்தியைப் படித்ததும் உற்சாகம் தாங்க முடியவில்லை. மூன்று பேரும் கண்டிப்பாக



மேற்படி நாடகத்துக்குப் போக வேண்டுமென்று முடிவு செய்தோம்.

குறித்திருந்த நேரம் ஐந்து மணி. ஆனால் ஒரு மணி முன்பே சென்றோம். வருகிறவர்களைப் பார்க்கலாம் என்ற ஆசைதான். டில்லியிலுள்ள தமிழர்கள் சகுடும்ப சமேதர்களாய் அணி அணியாய் வந்த காட்சி ஆனந்தமாயிருந்தது. தமிழ்நாட்டிலிருந்து 1,400 மைல்களுக்கப்பால் இத்தனை தமிழர்களைச் சேர்ந்தாற்போல் பார்த்ததில் எங்கள் உள்ளம் பூரித்தது.

சரியாக மணி ஐந்து. ராஜாஜி குறித்த நேரத்தில் வந்து சேர்ந்தார். நிர்வாகிகள் வரவேற்றனர். நானும் எதிரில் சென்று தலைவரை நமஸ்கரித்தேன்.

நாடகம் திருச்சி நேஷனல் காலேஜ் உதவி நிதிக்காக. நடித்தவர் அத்தனைபேரும் 'அமெச்சூர்'கள்தான். வெகு பாடுபட்டு நாடகத்தைச் சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்திருந்தனர்.

நாடகத்தைப் பற்றிய விமர்சனத்தை நான் எழுதுவதைக் காட்டிலும் ராஜாஜி அவர்களின் சொற்பொழிவைக் கொடுப்பதே போதுமானது. ஆனாலும் சில நடிகர்களைப் பற்றிக் குறிப்பிடுவது அவசியம் என்று தோன்றுகிறது.

கதாநாயகன் முத்தையனாக நடித்த ஸ்ரீ பி. விசுவநாதன் மகப் பொருத்தமாக நடித்தார். கல்யாணியாக நடித்த 'சந்துரு'வின் வேஷம், நடிப்பு, பேச்சு எல்லாம் நன்றாயிருந்தன. சப் இன்ஸ்பெக்டரின் மனைவி மீனாக்ஷியாக நடித்த பஞ்சாபகேசன் அசல் மீனாக்ஷி அம்மாளாக நடித்து, வெடுக்கும் துடுக்குமாகப் பேசிப் பலமுறை கரகோஷம் வாங்கிக் கொண்டார். பாண்டியன் வேஷம்போட்ட 'கப்புடு' அனைவரையும் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்தார். 304 நெ. கான்ஸ்டபிளாகச் சின்ன வேஷத்தில் நடித்த ஸ்ரீ ஏ. கே. அய்யர் நாடகம் பார்த்தவர்களிடம் பெரிய பெயரைத் தட்டிக் கொண்டார். மலையாளத்தையும் தமிழையும் கலந்து பேசி ஏகரகளை பண்ணி விட்டார். மற்றும் அனைவரும் நன்றாகவே நடித்தனர். நாடகம் பூராவும் ஒரு பாட்டுக்கூட இன்றி எல்லாம் சம்பாஷணையுடனேயே முடிந்து விட்டது. ஆனால், இடையிடையே சிறுமிகள் அழகாகத் தமிழ்ப் பாடல்களைப் பாடினர். திரை மறைவிலிருந்து ஒலி பரப்பியின் மூலம் அவர்கள் பாடினார்கள்.

நாடகம் முடிவதற்கு சிறிது நேரம் முன்பு ராவ்பகதூர் ஸ்ரீ ஸி. குப்புஸ்வாமி முதலியார் அவர்கள் திருச்சி நேஷனல் காலேஜின் சரித்திரத்தைக் கூறி, அதன் வைர விழா நிதிக்காக இந்த நாடகம் நடத்துகிறோம் என்றும், ராஜாஜி அவர்கள் தலைமை வகிக்க ஒப்புக் கொண்டதற்கு நன்றி செலுத்தியும் கொஞ்சம் கொச்சையான தமிழில் வெகு உற்சாகமாகப் பேசினார்.

பின்னர் தலைவர் ராஜாஜி அவர்கள் பேசியதன் சாராம்சம் வருமாறு:—

"நாடகம் நடிப்பது எவ்வளவு கஷ்டமான காரியம் என்பது பார்ப்பவர்களுக்குத் தெரியாது. நடிப்பவர்களுக்குத்தான் தெரியும். உத்தியோகம், குடும்பம், இதர தொல்லைகள். இதன் மத்தியில் பலர் ஒன்று சேர்ந்து, முயற்சி செய்து, நல்ல காரியத்திற்காக நாடகம் நடத்துகின்றனர். இது தமிழர்களின் தனி சாமர்த்தியம்.

அறுபது வருஷ காலமாகப் பல கஷ்டங்களைச் சகித்து, பல இடையூறுகளைத் தாண்டி, சர்க்கார் ஆதரவு அதிகம் இன்றி, திருச்சி நேஷனல் காலேஜ் நடந்து வந்திருக்கிறது. நான் அந்த ஸ்தாபனத்தைப் பார்த்திருக்கிறேன். அதற்கு உதவி செய்வது நல்ல கைங்கர்யம்.

தமிழர்கள் ரொம்ப நல்லவர்கள். சாமர்த்தியசாலிகள். தமிழ் அழகான பாஷை. தமிழில் உள்ள தவறிலும் கூட அழகு இருக்கும். தமிழரின் பண்பாடு மிக உயர்ந்தது. இம்மாதிரி நல்லவர்களான நாம் இந்தக் கெட்ட உலகத்தில் வாழ நேர்ந்தது நம் துர்ப்பாக்கியம். இந்த உலகம் நமக்குத் தகாது. வேறு சிறந்த உலகத்தில் வாழத் தக்கவர்கள் நாம்.

நம் ஊரில் பாருங்கள்: சண்டை என்பதே இல்லை. நமது கலை வளர்ச்சி உயர்ந்திருப்பதே இதற்குக் காரணம். நம் ஊரில் லஞ்சம்கூடக் குறைவுதான்.

இவ்வளவு உயர்ந்தவர்களாகிய நாம் நல்ல காரியத்திற்குப் பணம் கொடுப்பதற்கு மட்டும் கொஞ்சம் பின் வாங்குகிறோம். நம்மவர்கள் அதிகம் சம்பாதித்தாலும் அதிகம் கொடுக்க யோசிக்கிறார்கள். இங்கே பாருங்கள்: லக்ஷம் லக்ஷமாகக் கொடுக்கிறார்கள். தமிழ்நாட்டில் ஸ்ரீ அழகப்ப செட்டியாரைப் போன்று யாராவது கொடுக்க முன்வந்தால் அவரையே எல்லோரும் கேட்கிறார்கள். அதனால் அவரும் யோசிக்க வேண்டியதாகிறது. தமிழ்நாட்டில் தர்மம் செய்வதில் போட்டி ஏற்பட வேண்டும்.

கல்கி என்னைக் கேட்டுக் கதை எழுதி இருந்தால் இம்மாதிரி சோகமாகக் கதையை முடிக்க வேண்டாமென்று சொல்லியிருப்பேன். ஆனால் நான் சொல்வதை அவர் கேட்க மாட்டார். 'தப்பு செய்கிறவனைத் தப்பவிடக் கூடாது; தவறு செய்கிறவனுக்குத் தண்டனை கிடைக்கத்தான் வேண்டும்' என்று பிடிவாதம் பிடிப்பார். என்னைக் கேட்டுக் கொண்டும், எனக்குத் தெரிந்தும்தான் எல்லாம் அவர் செய்கிறார் என்று பலர் எண்ணுகிறார்கள். உண்மையில் அப்படியில்லை. அவர் கதைகள் பலவற்றை நான் படித்ததில்லை. ஆனால் அவர் எழுதுவது எல்லாம் நன்றாய் இருக்குமென்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

நாடகத்தை நடித்த இளைஞர்கள் எல்லோரும் வெகு நன்றாக நடித்தார்கள். உத்தியோகத் தொல்லையை விட்டு இவர்கள் நாடகமே நடித்தால் கூட நன்றாகச் சம்பாதிப்பார்கள்.

எனக்கு நாடகம், ஸினிமா என்றாலே பயம். ஹாஸ்யம் என்ற பெயரால் விரஸமான காட்சிகளையும் அசிங்கமான சம்பாஷணைகளையும் புகுத்திச் சபையோருக்குக் கூச்சம் உண்டாகும்படி செய்வது தென்னாட்டில் சகஜமாயிருக்கிறது. இந்த நாடகத்தில் அப்படியொன்றுமில்லை. எல்லாவற்றையும் நான் ரஸித்தேன். தமிழ்நாட்டு மக்களின் பண்பாட்டைப் பற்றிப் பெருமையடைந்தேன். ஒழுக்கக் குறைவு ஒரு சிறிதும் ஏற்படாமல் குற்றமற்ற அற்புதமான ஹாஸ்யச் சுவையுடன் 'பாண்டியன் கம்பெனியார்' வம்பர் மகா சபையை நடத்தினார்கள். அவர்களைப் பெரிதும் பாராட்டுகிறேன். இத்துடன் நிறுத்திக் கொள்ளாதீர்கள். நாடகத்துக்கென்றே ஒரு சிறிய சபையை நிர்மாணித்துக் கொள்ளுங்கள். ஒன்றிரண்டு மாசம் ரஜா எடுத்துக் கொண்டு தெற்கே ஊர் ஊராய்ச் செல்லுங்கள். 'இதுதான் நாடகம்; இப்படித்தான் நடிக்க வேண்டும்' என்று தமிழ் நாட்டிலே எல்லோருக்கும் காட்டுங்கள்!"

பலத்த கரகோஷத்துடன் ராஜாஜியின் சொற்பொழிவு முடிந்தது. கடைசி வரையில் நாடகத்தை அனைவரும் இருந்து ரஸித்தனர். மறு தினமும் நாடகம் நடைபெற்றது. திருச்சி நேஷனல் காலேஜுக்காகப் புது டில்லியில் நாடகம் நடத்திய காட்சி ஒரு பொன் விழாவைப்போல் நடைபெற்றது.

நான் டில்லியில் காணவேண்டிய காட்சிகளையெல்லாம் கண்டேன். அவற்றில் எந்தக் காட்சிகள் என் மனதில் நீடித்து ஞாபகமிருக்குமென்று சொல்வதற்கில்லை. ஆனால் டில்லித் தமிழர்கள் நடத்திய மேற்படி நாடகக் காட்சியை மட்டும் என்றென்றும் மறக்க முடியாது.

நீங்கள் இன்று மக்லீன்ஸால் பல் துலக்கினீர்களா?





துலக்கினேன்.
நான் ஒரு நாளும்
தவறுவதில்லை.




MT. 6047

---

T. K. S. சகோதரர்களின்

# நாடக ஆரம்ப விழா!

பாலக்காடு
கௌடர் டாக்கீஸில்

★

21-11-46 முதல் 1-12-46 வரை

## பில்ஹணன்

★

3-12-46 முதல் 14-12-46 வரை

## சிவலீலா

★

15-12-46 ஒரே நாள்

## மனோஹரா

தினசரி இரவு 9-45 மணிக்கு

டிக்கெட் வரியுள்பட

2-12-0, 1-10-0, 0-13-0, 0-6-9

# கம்பர் தரும் காட்சி



டி.கே.சி.

## 159. புறப்பட்டு விட்டது பொன்மான்!

சீதையைப் பற்றியும், அவளுடைய அழகைப் பற்றியும், காதல் அனுபவங்களைப் பற்றியும் உண்மை ததும்பப் பேசினாள் சூர்ப்பனகை. ராவணன் கேட்டான். உயர்ந்த சாதனங்களில் பயின்று சித்தி பெற்றிருந்த அவனது உள்ளம் நெகிழ்ந்து விட்டது. காதல் கொந்தளிப்பால் மனம் தடுமாற்றம் அடைந்து தனக்கு ஏற்பட்ட கஷ்டங்களையும் மறந்து விட்டான். தன் ஆன்ம சித்திகளையும் மறந்து விட்டான். ஒன்றை மாத்திரம் மறக்க இயலவில்லை; அதாவது சீதையை!

இரவெல்லாம் அவளது நினைவுதான். தூக்கமே பிடிக்க வில்லை. என்றும் இல்லாத சஞ்சலத்துக்கு உள்ளாய் விடுகிறான்.

அப்போது ஒரு யோசனை தோன்றுகிறது. மாமன் மாரீசனைக் கூப்பிட்டு அவனிடம் சொல்லுகிறான்:

"தசரதன் மகன் ராமன் என்பவனும் அவன் தம்பியும் பஞ்சவடியில் தங்கி இருக்கிறார்கள்: அவர்கள் நம்முடைய சூர்ப்பனகையை அவமானம் செய்துவிட்டார்கள். வாளை எடுத்து மூக்கையே அரிந்து விட்டார்கள். இதற்குப் பழி வாங்காமல் தீராது.

"ராமனுடைய மனைவி சீதை என்பவள் அவனுடன் வந்திருக்கிறாள். அவளை எப்படியாவது தூக்கிக்கொண்டு வந்துவிட வேண்டும்; அப்படிச் செய்தால்தான் தீரும் நம் அவமானம்.

"நீ அதற்காக ஒரு காரியம் செய்ய வேண்டும்; அற்புதமான அழகு வாய்ந்த மான் உருவம் தரித்துச் சீதையை அணுக வேண்டும். சீதைக்கு மான்மேல் அபாரப் பிரியம். உன்னைப் பிடித்துத் தரவேண்டும் என்று ராமனைக் கேட்பாள்; அவனும் பிடிக்க முயல்வான். நம்முடைய காரியம் சித்தியாகி விடும்" என்று விஷயத்தைச் சொன்னான் ராவணன்.

மாரீசனுக்கு இது ஆபத்தான காரியம் என்று தெரியும். விசுவாமித்திரர் செய்த யாகத்தில், மாரீசனும் அவன் தம்பியும் போய் இடையூறு செய்தார்கள். ராமனது பாணத்தினால் தம்பி சுபாகு இறந்தொழிந்தான். மாரீசன் மாத்திரம் எப்படியோ தப்பி ஓடிவந்து விட்டான். இதனால் ராமனது வில் செய்யும் வேலை இன்னதென்று மாரீசனுக்குத் தெரிந்தேயிருந்தது. ஆனால், என்ன செய்ய முடியும்? ராவணனது வார்த்தையை மறுக்க முடியாதுதானே! 'சரி, கெட்ட காலம் நமக்குக் கிட்டி விட்டது' என்ற எண்ணத்துடன் ராவணன் சொன்னபடி செய்யப் புறப்படுகிறான்.

மேல்நாள் அவன்
வில்வலி கண்டமை
யால்
தானாக அ-
மைந்துச மைந்தில
னால்
'மானா குதி'
என்றவன் வாய்மொழி
யால்ப்
போனான் மன
மும்செய லும்புகல்
வாம்.

[மேல் நாள்: விசுவாமித்திரர் வேள்வி செய்த சந்தர்ப்பத்தில்; அவன் வில் வலி கண்டமையால்: ராமனது வில்லின் சக்தியை நேர் அனுபவமாகக் கண்டிருந்த காரணத்தால்; தானாக அமைந்து சமைந்திலனால்: தானாக ஒப்புக்கொண்டு செயல் செய்ய உடன்படவில்லை; மான் ஆகுதி என்றவன்: தன்னை மான் வேஷம் போடச் சொன்ன ராவணனது; வாய்மொழியால் போனான்:

கட்டளையாகப் போன மாரீசனது: மனமும் செயலும் புகல்வாம்: மனப்பான்மையும் செயலும் இப்படி என்று சொல்லுவோம்.]

தன் தம்பி சுபாகு என்ன, கரன் முதலிய சுற்றத்தார் என்ன, எல்லாரும் அழிந்தது பற்றி மனம் உடைகிறான்.

வெம்சுற் றம்நி-
னைந்துகும், விரரை
வே(று)

அஞ்சுற் றும
றுக்குறும்: ஆழ்குழி
நீர்

நஞ்சுற்(று) உறும்
மீனின் நடுக்குறு
மால்;

நெஞ்(சு)உற் றதோர்
பெற்றி நினைப்பரி
தால்

[வெம் சுற்றம் நினைந்து உகும்: அதிபராக்கிரம சாலிகளான அரக்கர் அழிந்து போனதை எண்ணித் தளர்கிறான்: விரரை வேறு அஞ்சுற்று மறுக்குறும்: ராம லக்ஷ்மணர்களை எண்ணி இன்னும் என்ன செய்யப் போகிறார்களோ என்று பயந்து நடுங்குகிறான்: ஆழ்குழி நீர் நஞ்சுற்று உறும் மீனின் நடுக்குறுமால்: ஆழ்ந்ததோரு குழியில் தங்கிய நீரில் நஞ்சு கலக்கவும் அது காரணமாக அங்குள்ள மீன் எப்படிப் பதைக்குமோ அப்படிப் பதைக்கிறான் மாரீசன்: அவன் நெஞ்சு உற்றதோர் பெற்றி நினைப்பரிதால்: அவன் நெஞ்சு பட்ட பாட்டை நினைக்கவும் முடியாது.]



மாரீசன் அபூர்வமான அழகு கொண்ட மானின் உருவத்தை எடுத்துக் கொண்டான். தனக்குச் சமானமே இல்லை என்னும்படி பிரகாசிக்கிறது அந்த மானின் மேனி. அதனுடைய உருவத்திலிருந்து வீசிய மின்னல் போன்ற கிரணங்கள் வானத்திலும் பூமியிலும் பாய்ந்து ஒளிர்கின்றன. இத்தகைய பொன் மான் உருவங் கொண்டு சீதையை நாடிப் போகிறான் மாரீசன்.

தன்மா னம்இ-
லாதத யங்கொளி
சால்

மின்,வா னமும்
மண்ணும்வி ளங்குற,
ஓர்

பொன்மான் உரு-
வங்கொடு போயினா-
னன், -

தன்மான் அனை-
யாள்தனை நாடுறு
வான்.

[தன் மானம் இலாத: தனக்குச் சமானம் என்பது இல்லாத: தயங்கு ஒளிசால்மின்: மிக்க பிரகாசம் கொண்ட மின்னல் போன்ற கிரணங்கள்; வானமும் மண்ணும் விளங்குற: வானத்திலும் பூமியிலுமே ஒளிசெய்ய: ஓர் பொன்மான் உருவங் கொடு போயினான்: ஒரு அழகிய பொன்னிறமான மான் உருவத்தை எடுத்துக்கொண்டு போகிறான்: தன்மான் அனையாள் தனை நாடுறுவான்: ஒரு பயமும் அறியாத நல்ல மானைப்போன்ற சீதையைத் தேடியவனாய்.]

இவ்விதம் மாரீச மான் சீதையைக் காணப் புறப்படுகிறது. அப்போது சீதை என்ன செய்து கொண்டிருக்கிறாள் என்பதை இனிப் பார்ப்போம்.

# சேதமின்றி சலவை செய்யப்பட்டது அதோடு ஸன்லைட்டால் வெண்மையாக்கப்பட்டது

— ஜாஸ்தி அழுக்குப் படிந்த இடங்கள் உள்பட

உங்கள் ஆடைகளில் பழக்கத்தால் சேதமடையுமிடங்களை கவனியுங்கள்! இவைதான் ஜாஸ்தி அழுக்குப்படியும் பாகங்கள். ஆடைகளை, சிறிது சோப்பைத்தேய்த்து தண்ணீரில் நனைந்து, அடித்துத் துவைப்பதால் அதிகமாக கெட்டுப்போகக் கூடிய இடங்களும் இவையே.

உங்கள் துணிகளை ஸன்லைட் முறைப்படி சுத்தம் செய்து அடித்துத் துவைப்பதனாலேற்படும் நாசத்தை விலக்குங்கள்.

ஸன்லைட்டின் ஏராளமான சுலபமாக இயல்கிற நுரையை, நனைந்த துணியில் புகுத்திக் கசக்கினால் அதிகமாக அழுக்குப்படிந்துள்ள இடங்கள்கூட தூய வெண்மையாகிறது. இச்சுத்தமான சோப் உங்கள் துணிகளுக்கு தன்மையளிக்கிறது — அவைகளுக்கு இறகையொத்த அழகைக் கொடுக்கிறது. அன்றியும் உங்கள் கைகளை மிருதுவாகவும், மழமழப்பாகவும் வைத்துக்கொள்ளுகிறது.

இது ஸன்லைட் முறைப்படி சுத்தம் செய்தது!




# ஸன்லைட் சோப்

S. 90-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED




ஷத்துக்கு முன் காலஞ் சென்ற அவனுடைய முதல் மனைவி. சுசிலாவுக்குத் தான் இரண்டாம் தாரமாக ராமநாதனுக்கு வாழ்க்கைப் படுகிறோம் என்று தான் தெரிந்திருந்ததே தவிர அந்த முதல் மனைவி யார் என்பது ஒன்றும் தெரியாது. தெரிந்து கொள்ள ஆவலும் அவளுக்கு இருக்கவில்லை. இன்று அந்தப் புஸ்தகத்தைப் பார்த்ததும் விசேஷ ஆர்வத்துடன் அதைப் புரட்டிப் பார்த்தாள்.

**மா**ம்பலத்தில் ஒரு அழகான பங்களா. காலை மணி பதினொன்றிருக்கும். 'ஐயரை'க் கொண்டுபோய் ஆபீஸில் விட்டுவிட்டு வெற்றுக்கார் பங்களாவிற்குள் நுழைந்து கொண்டிருந்தது. முன் வாசலில் படுத்திருந்த நாய் ஒரு தரம் கண்ணைத் திறந்து பார்த்துவிட்டு மறுபடியும் தூங்க ஆரம்பித்துவிட்டது. சமையற்கார பிராம்மணர் தம் சாப்பாடெல்லாம் முடித்துக் கொண்டு வெள்ளை வேஷ்டியை உடுத்திக்கொண்டிருந்தார்.

அந்த வீட்டு மாடி அறையில் வெகு நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்த எஜமானியம்மாள் ஒரு முடிவுக்கு வந்தவளாய்த் தன் நாற்காலியைவிட்டு எழுந்திருந்தாள். ஆமாம், சுசிலா அந்தப் பெட்டியைத் திறந்தே பார்த்துவிடுவது என்று முடிவு செய்து விட்டாள். 'இத்தனை நாள் அவர் சொற்படி கேட்டு என்ன சுகத்தைக் கண்டோம்; ஒன்றுமில்லை. இன்றைக்கு அதைத் திறந்தே பார்த்து விடுவது' என்ற முடிவுடன் எழுந்திருந்தாள். ஒரு பழைய சாவிக் கொத்தைக் கொண்டுவந்து அந்தப் பெட்டியைத் திறந்தாள். ஏகப்பட்ட துணிமணிகள், புடவைகள், ரவிக்கைகள், புஸ்தகங்கள் அதில் இருந்தன. அவைகளையெல்லாம் எடுத்துவெளியே போட்டாள். இன்னும் அதற்குள் என்னதான் இருக்கிறது என்று பார்த்தாள். துணிமணிகளுக்குக் கீழே ஒரு — 'போட்டோ ஆல்பம்'—புஸ்தகம் இருந்தது. அதைத் திறந்தாள். முதல் பக்கத்தில் அழகான எழுத்துக்களில் 'மங்களா ராமநாதன்' என்று எழுதி இருந்தது.

ராமநாதன் என்பது சுசிலாவின் கணவனுடைய பெயர். மங்களா ஒரு வரு

முதலில் மங்களாவும் ராமநாதனும் கல்யாணம் ஆனபோது எடுத்துக் கொண்ட படம் இருந்தது. 'நானும்தான் எடுத்துக்கொண்டேன்' என்று நினைத்து மேலே புரட்டினாள் சுசிலா.

காலையில் ராமநாதனுக்குக் காப்பி கொண்டு வரும்போது எடுத்த படம், மத்தியானம் வெற்றிலை பாக்கு மடித்துக் கொடுக்கும்போது எடுத்த படம், மாலையில் வீணையின் முன்னால் எடுத்த படம். இப்படி அடுத்தடுத்து வந்தன பல படங்கள். பின்னர் மங்களாவுக்கு விதவிதமான புடவைகள் ரவிக்கைகள் அணிவித்துப் பல படங்கள் எடுக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு தோற்றத்திலும் மங்களா புதுப்புது அழகுடன் தோற்றமளித்தாள். ஆனால் பெங்களூர் தலைப்புத் தெரியும்படி அவள், கொசுவம் வைத்து உடுத்திக்கொண்டு கர்நாடக பாணியில் தோற்றமளித்தபோது, அவளுடைய அழகு பன்மடங்கு அதிகமாகி விட்டது! அதையே சற்று நாழிகை பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு என்ன என்னமோ எண்ண ஆரம்பித்தாள் சுசிலா.

"எனக்குக் கலியாணமானபோது இவ்வளவு இளவயதினராய், யுவபுருஷராய்த் தோன்றும் ஒருவருக்கு இரண்டாம் தாரமாக மணப்பதில் தவறில்லை என்று நினைத்தேனே அதைப் போன்ற பெரிய தவறு எதுவுங் கிடையாது போலிருக்கிறது. ஆம்; ஒருத்தியிடம் உள்ளத்தைப் பறிகொடுத்து விட்டு வாழ்ந்த ஒருவர் மறுபடியும் அதே மாதிரி மற்றொருத்தியுடன் பழக வேண்டுமென்றால் சாத்தியமா? நான் எதிர் பார்த்தது எவ்வளவு தவறான

காரியம்? என்னிடம் உற்சாகக் குறைவுடன் அவர் பழகுவதில் வியப்பேயில்லை! இருந்தாலும் அக்கா மஞ்சுளாவைப்போல் அவர் இதயக் கோயிலில் இடம் பெற முடியாவிட்டாலும் அந்தக் கோபுர வாசல் தரிசனமாவது நமக்குக் கிட்டலாகாதா........" என்று பல பல நினைத்தாள்.

'பாம் பாம்' என்று காரின் ஹாரன் சப்தம் கேட்டது. சுசீலா வெகு துரிதமாகத் தன் அலங்காரத்தை முடித்துக் கொண்டிருந்தாள். நிதானமாக எப்போதும்போல் ராமநாதன் 'டக் டக்' என்று பூட்ஸ் காலால் சத்தப்படுத்திக் கொண்டு மாடிப்படி ஏறி வந்துகொண்டிருந்தான். 'டக் டக்' என்ற ஒவ்வொரு சப்தமும் சுசீலாவின் மனதில் எண்ணற்ற அலைகளை எழுப்பிக்கொண்டிருந்தன. 'தகாத காரியம், வேண்டாத காரியம் செய்து விட்டேன் என்று திட்டுவாரோ? அல்லது அக்காவைப் போல் அவர் பிரியத்தை விரும்புகிறேனே என்று என்னைப் பார்த்துப் பரிதாபப் படுவாரோ' என்று என்ன வெல்லாமோ நினைத்தாள். கடைசியில் கொசுவம் வைத்து உடுத்திய பாணியில் ராமநாதன் முன் போய் நின்று விட்டாள். முகத்தில் ஒரு செயற்கைச் சிரிப்பு இருந்தது.

அவளை அந்தக் கோலத்தில் பார்த்தானோ இல்லையோ, ராமநாதன் ருத்ராகாரமானான். "உன்னை யார் அந்தப் பெட்டியைத் திறக்கச் சொன்னது? உன்னை யார் இப்படி உடுத்திக்கொள்ளச் சொன்னது! உனக்கு யார் இந்தப் புடவையை எடுத்துக் கொடுத்தது......" என்று அடுக்கிக் கொண்டே போனான். சுசீலாவினால் கேட்கவே முடியவில்லை. 'விர்' என்று தன் படுக்கை அறைக்கு வந்து விட்டாள்.

*　　　*　　　*

இரவு பத்து மணி யிருக்கும். சுசீலா சாப்பிடவில்லை என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டான் ராமநாதன். தலை குனிந்து யோசித்துக் கொண்டே சுசீலாவின் அறைக்கு வந்தான். அங்கு அவள் அன்று மாலை உடுத்தியிருந்த புடவை ஒரு மூலையில் கிடந்தது. சுசீலா கட்டில்மேல் படுத்துக்கொண்டிருந்தாள். முதுகு வாசலை நோக்கி யிருந்தது. வாசற்படியில் நின்று கொண்டிருந்த ராமநாதன் சுசீலா விழித்துக்கொண்டு தான் இருப்பதாக நினைத்தான். 'சுசீலா' என்று கூப்பிட்டான்: பதிலில்லை. அடுத்து 'சுசீலா' என்றான், பதில் இல்லை. 'தூங்கிக் கொண்டிருக்கிறாள்' — என்று அறிந்து அவள் படுத்திருந்த கட்டிலின் மேல் உட்கார்ந்து அவள் கன்னத்தைத் தடவிய வண்ணம் தணிந்த குரலில் 'சுசீலா' என்றான்.

அவள் கண் விழித்துப் பார்த்தாள். தன் கணவன் ராமநாதன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து ஒரு இனிய புன்னகை பூத்தாள். ராமநாதன் அந்தக் கணம், 'இந்தச் சிறு முறுவலுக்குக் காணிக்கையாக வானகம் வையகம் யாவும் அளிக்கலாமே' என்று நினைத்தான்.

ஆனால், தூக்கக் கலக்கம் சற்று தெளிந்தபோது சுசீலாவுக்கு அன்று மாலை நடந்த நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன. தான் செய்த தவறை மன்னிக்கத் தன்னைத் தேடியே தன் கணவர் வந்ததாக நினைத்தாள் சுசீலா. உடல் பயத்தினால் பதறியது. ராமநாதன், "சுசீலா, நல்ல தூக்கமோ?" என்றான்.

சுசீலா, "சாயங்காலம் உங்களுக்கு அவ்வளவு கோபம் உண்டாகும்படி நடந்து கொண்டோமே என்று எண்ணி எண்ணி அழுது கொண்டே படுத்திருந்தேன். அப்படியே தூங்கி விட்டேன். எப்பொழுது தூங்கினேன் என்று தெரியவில்லை. ஆனால் நான் செய்த தவறை நீங்கள் இன்னும் மனதில் வைத்துக் கொண்டிருக்கிறீர்களா?" என்று இரக்கம் தோன்றக் கேட்டாள்.

"நன்றாகக் கேட்டாய்! தவறு உன்னுடைய தல்ல. என்னுடையதுதான்! உன்னை நான் அப்படிக் கோபித்துக் கொண்டிருக்கக் கூடாது. ஆனால் அந்த நிலையில் அப்படிக் கோபித்துக் கொள்ளாமலும் இருக்க முடியாது. எனக்கு அந்தப் புடவை, அந்தக் கட்டு என்றைக்கு மஞ்சுளா கட்டிக் கொண்டாளோ அன்றிலிருந்தே எனக்கு அவளைப் பிடிப்பதில்லை. ஏன், அவள் செய்த காரியம் அவள் சம்பந்தப்பட்ட எதுவுமே எனக்கு இன்று நினைத்தாலும் பிடிப்பதில்லை."

மஞ்சுளாவிடம் அபரிமிதமான காதல் கொண்டிருந்ததாக சுசீலா நினைத்திருந்தாள். ஆனால் ராமநாதன் இப்படிப் பேசியது சுசீலாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது! ராமநாதன் நிறுத்தியதும் "ஏன்?" என்று கேட்டு வைத்தாள்.

"ஏன், என்று கேட்கிறாய்? சரி, சொல்லுகிறேன். என்றைக்காகிலும் ஒரு நாள் சொல்லித்தானே ஆகவேண்டும்?

"மஞ்சுளாவைக் கலியாணம் பண்ணிக் கொண்டபோது எனக்கிருந்த உற்சாக

மும் சந்தோஷமும் இவ்வளவு அவ்வளவு அல்ல. இதை யெல்லாம் நீ அந்தப் போட்டோக்களிலிருந்தே ஊகித்திருப்பாய். ஆனால் நான் எவ்வளவுக் கெவ்வளவு அவளிடம் அன்பு செலுத்தினேனோ அவ்வளவுக் கவ்வளவு எனக்கு ஏமாற்ற மளிக்கும் வகையில் பழக ஆரம்பித்தாள். என்னிடம் பேசிக் கொண்டிருக்கும்போதே எதைப் பற்றியோ நினைக்க ஆரம்பித்து விடுவாள். நான் பேசிய தெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்கு ஆகிவிடும்.

"இது ஏதோ இயற்கையான சுபாவம் என்று எண்ணினேன். அப்படியல்ல என்பது ஒரு நாள் தெரிந்தது. அன்று அவள் புஸ்தகம் படிக்கும் பாவனையில் எவனோ ஒருவனுடைய படத்தைப் பார்த்துக் கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தாள். இதை அவளுக்குப் பின்புறமிருந்து கவனித்த நான் முதலில் கோபமடைந்தேன். பின்னர் கோபப்பட்டு என்ன பயன்? என்று சும்மா திரும்பி விட்டேன். திரும்பியபோது அவள் என் காலடிச் சத்தத்தைக் கேட்டிருக்க வேண்டும். அவள் அன்றிலிருந்து என்னிடம் அதிகமாக அன்பு காட்டத் தொடங்கினாள். ஆனால், நான் அவளை வெறுக்கவே ஆரம்பித்தேன். பிறகு கொஞ்ச நாளில் பாவம், அவள் நோய்வாய்ப் பட்டாள். பிறகு நடந்ததுதான் உனக்குத் தெரியுமே!

"அப்படிப்பட்டவளுடைய விஷயங்கள் எனக்கு எப்படிப் பிடிக்கும்? நீயே சொல்!" என்றான்.

"நீங்கள் அது யாருடைய போட்டோ என்று தெரிந்து கொள்ளவில்லையா?" என்றாள் சுசீலா.

"எனக்கு என்ன வந்தது? அது யார் போட்டோவானால் என்ன? ஆனால் உனக்குத் தெரிய வேண்டும் என்ற ஆவல் இருக்கிறது! இதோ பார்" என்று சொல்லிக் கொண்டே அன்று காலை அவள் புரட்டிக் கொண்டிருந்த 'போட்டோ ஆல்பம்' புஸ்தகத்தைக் கொண்டு வந்தான்

அதில் எல்லாப் பக்கத்தையும் புரட்டி விட்டுக் கடைசிப் பக்கத்தை எடுத்துக் காட்டினான்.

சுசீலாவின் கண்கள் ஆச்சரியத்தினால் அகலமாய் விரிந்தன. "என்ன? இது என் அண்ணாவின் போட்டோ அல்லவா" என்றாள்.

"உன் அண்ணாவா!"

"ஆமாம்" என்று சொல்லிக் கொண்டே அந்தப் புஸ்தகத்திலிருந்து போட்டோவைக் கையில் எடுத்தாள். கையில் வைத்துப் பார்த்துக்கொண்டிருந்தபோது பின்புறம் எதேச்சையாகத் திருப்பினாள்.

"இதில் ஏதோ எழுதியிருக்கிறதே!" என்றாள் சுசீலா. ராமநாதன் சுசீலாவின் பின்புறம் வந்தான். இருவருமாகச் சேர்ந்து படித்தனர்.

மஞ்சுளா!

நான் படுத்த படுக்கையாகி விட்டேன். இன்னும் சில நாளில் படுக்கையிடமும் விடை பெற்றுக்கொண்டு விடுவேன். அதற்கு முன் ஒரு விஷயம் சொல்ல வேண்டும் என்று இந்தப் படத்தை உனக்கு அனுப்புகிறேன். உன் உள்ளத்தில் என்னைப் படம் பிடித்து வைத்திருப்பாய். அதனால் உனக்குச் சர்வதா துன்பமே. அப்படித் துன்பத்தை அனுபவிக்கும் போதெல்லாம் இந்தப் புகைப் படத்தைப் பார். நான் கடைசியாக சொல்லும் விஷயம் உனக்கு எப்போதும் நினைவு படுத்தும். உன் கணவனை மனதாரக் காதலித்து அவருடைய இன்பத்திலும் துன்பத்திலும் பங்கு கொண்டு அவருடைய உத்தமப் பத்தினியாக இரு!

உன் அன்புள்ள

ராகவன்.

கடிதத்தை இருவரும் படித்து முடித்தனர். இருவர் கண்களிலும் கண்ணீர் துளித்து நின்றன! சுசீலாவின் உள்ளம் 'தன் காதலியைத் தங்கள் காதலுக்கு அர்ப்பணம் செய்தான் என் அண்ணா. பின்னர் தன் அருமைச் சகோதரியையே தங்கள் காதலுக்கு அர்ப்பணம் செய்திருக்கிறான். இவனுக்காவது தங்கள் காதலை அளிக்க மாட்டார்களா?' என்று ஏங்குவது போலிருந்தது!

'மஞ்சுளா அந்தப் போட்டோவைப் பார்த்த நாளிலிருந்து என்னிடம் அதிகப் பற்றுதலையே காட்டி வந்தாள். அதை யெல்லாம் என்னை ஏமாற்றக் கையாளும் முறைகள் என்றே உதாசீனம் செய்து வந்தேன். எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டேன்! உண்மை இன்றல்லவா தெரிகிறது?' என்று தன் மனதில் நினைத்தான் ராமநாதன்.

"மனிதன் செய்யும் தவறு ஒவ்வொன்றும் உண்மைக்கு அருகில் கொண்டு விடுகிறது. ஒரு தவறு செய்து உண்மையைத் தெரிந்து கொண்டேன். மறுபடியும் அதே தவறு இழைக்க மாட்டேன். சுசீலா, இனி ஒரு கணமும் உன் அன்பை அலட்சியம் செய்ய மாட்டேன். நீ போய்ச் சாப்பிட்டு விட்டு, இன்று சாயங்காலம் புடவை உடுத்திக்கொண்டு வந்தாயே அதுபோல் வா; பார்ப்போம்!" என்றான் ராமநாதன்.

சுசீலாவின் இதழ்களில் ஒரு புன்னகை அவளை யறியாமலே தவழ்ந்தது.




விக்கிரமசிங்கபுரத்தை ராஜமார்த்தாண்டன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவனுக்கு ராஜகுமாரி என்ற ஒரு பெண் இருந்தாள். அந்தப் பெண்ணை ராஜா ரொம்ப ரொம்ப செல்வமாக வளர்த்து வந்தான்.

ராஜகுமாரிக்குக் கல்யாணம் ஆக வேண்டிய வயது வந்தது. ராஜாவுக்கும் தன் பெண்ணுக்குக் கல்யாணம் செய்துவிட வேண்டும் என்ற கவலை ஏற்பட்டு விட்டது.

நாட்களும் போய்க் கொண்டே இருந்தன. மாதங்களும் கழிந்து கொண்டே இருந்தன. ராஜகுமாரிக்கு தகுந்த மாப்பிள்ளை கிடைக்கவில்லை.

ராஜமார்த்தாண்டன் மூன்று வருஷங்களுக்கு ஒரு முறை மந்திரியை மாற்றுவான். இந்தச் சமயத்தில் மந்திரியை வேறு, மாற்றி ஆக வேண்டும்.



ராஜாவுக்குத் தூக்கமே இல்லை. பாவம் திண்டாடிக் கொண்டிருந்தான்.

அந்தச் சமயத்தில் யாரோ ஒரு பண்டிதர் ராஜாவைப் பார்க்க வந்தார். ராஜாவும் அவரை வரவேற்று உபசரித்தான். வந்த காரியத்தை ராஜா கேட்கு முன்பே பண்டிதர் பேச ஆரம்பித்தார்.

"ஏ ராஜனே! எனக்குப் பதினான்கு லோகத்திலுள்ள சகல பாஷைகளும் தெரியும். ஆனால் என்னுடைய தாய் பாஷையை யாராலும் கண்டு பிடிக்க முடியாது. உன்னுடைய தேசத்தில் நீ புத்திசாலி மந்திரிகளைத்தான் வைத்திருப்பாய் என்று கேள்விப்பட்டு இங்கு வந்தேன். என்னுடைய சொந்த பாஷையைக் கண்டு சொல்லுபவர்களுக்கு எனக்குத் தெரிந்த அறுபத்தி நான்கு சாஸ்திரத்தையும் கற்றுக் கொடுத்து, நானும் அவனுக்கு உதவியாக இருப்பேன்" என்றார்.

ராஜா சிறிது நேரம் யோசித்துவிட்டு "பண்டிதப் பெரியவரே! எனக்கு ஒரு வாரம் தவணை கொடுத்தால் தாங்கள் சொன்னதைப் பூர்த்தி செய்ய முயல்கிறேன்" என்றான்.

அன்று இரவு பலமாக யோசித்தான் ராஜமார்த்தாண்டன். திடீர் என்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

மறுநாள் பறை சாற்றுகிறவர்களைக் கூப்பிட்டு "நமது ராஜ்யத்துக்கு

வந்திருக்கும் பண்டிதருடைய தாய் பாஷையைக் கண்டு பிடிப்பவர்களுக்கு ராஜகுமாரியைக் கல்யாணம் செய்து கொடுப்பதோடு அவரே மந்திரியாக நியமிக்கப் படுவார்'' என்று பறை சாற்றச் சொன்னான்.

ஒரு நாள், இரண்டு நாள், இப்படி ஆறு நாள் ஆயிற்று. ஒருவரும் வந்த பாடில்லை. ராஜாவுக்கோ அவமானமும் அதிருப்தியும் உண்டாய் விட்டது.

கடைசியாக ஏழாம் நாள் ஒரு அழகான வாலிபன் வந்தான் ராஜாவிடம். "மகாராஜா, நான் சொல்லுகிறபடி செய்ய அனுமதித்தால் அந்தப் பண்டிதருடைய சொந்த பாஷையைக் கண்டு பிடித்துச் சொல்லுவேன்'' என்றான்.

அதற்கு அரசன் "சரி, என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.

நானே இரவு பண்டிதர் படுத்திருக்கும் அறையில் நான் எப்பொழுது வேண்டுமானாலும் போக அனுமதி தர வேண்டும் என்றான். அரசனும் சரி என்றான்.

மறு நாள் இரவு ஒரு மணி இருக்கும். பண்டிதர் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் அந்த வாலிபன் வந்தான். பண்டிதர் பக்கத்தில் போய் ஓங்கி ஒரு அறை வைத்தான் கன்னத்தில். அவ்வளவு தான்; தூங்கிக் கொண்டிருந்தவர் தூக்கக் கலக்கத்தில் "ஐயையோ, அம்மா!'' என்று அலறிப் புடைத்து எழுந்திருந்தார்.

உடனே, அவன் நேராக அரசனிடம் போய், "பண்டிதருக்குத் தமிழ்தான் தாய் பாஷை'' என்றான். "அதை எப்படிக் கண்டு பிடித்தாய்?'' என்றான் அரசன். அதற்கு அவன் நடந்தது அவ்வளவையும் விவரமாகச் சொன்னான். அதைக் கேட்ட அரசன் ரொம்ப சந்தோஷப்பட்டான் என்று சொல்லவும் வேண்டுமா?

அரசன் பண்டிதரைத் தன் சமஸ்தானப் புலவராக நியமித்தான். அந்த அழகான வாலிபன் பலராமனுக்கு முதல் மந்திரிப் பதவியையும் கொடுத்துத் தன் மகளையும் அவனுக்கு மணம் செய்வித்து ஆசிர்வதித்தான்.










தாயார்:— ஏண்டா பசங்களா, இப்படி சொட்டச் சொட்ட வந்து நிக்கிறீர்?

பையன்:—மழை பெய்யறதே, அம்மா! அதனாலே பசங்களெல்லாம் நனையாக் கூடாதுன்னு பள்ளிக்கூடத்திலே லீவு விட்டுட்டா.

# வான சஞ்சாரம்

இசைத்தேனீ

திருச்சியில் 7உ. முடிகொண்டான் வெங்கட் ராமய்யர் பாடியவைகளில் 'ஸ்ரீவித்யா ராஜ கோபால' என்ற தீக்ஷிதர் கிருதி சாதாரண மாய்க் கேட்டிராத அபூர்வப்பெரிய உருப்படி. அதன் ராகம் 'ஜகன்மோஹினி' என்று அறிவிக்கப்பட்டது. அந்தப் பெயர் கொண்ட வார்த்தை சாஹித்யத்தில் கேட்டது. ஆனால் பாடப்பட்ட ராகமும் கிருதியும் சுத்த காந் தாரமும் பிரதிமத்யமமும் கொண்டிருந்ததால் முதலில் சற்று பிரமையைக் கொடுத்தது. ஆராய்ந்து பார்க்கும்போது, வழக்கத்தி லிருக்கும், மாயாமாளவகௌளை ஜன்யமான ஜகன்மோஹினி ராகமல்ல என்றும், 38-வது மேளமான 'ஜலார்ணவ'த்தைச் சார்ந்தது என்றும், அதற்கு வெங்கடமகியால் கொடுக் கப்பட்ட பழைய பெயர் 'ஜகன்மோஹனம்' என்றும் தெரிய வந்தது. மொத்தத்தில் ராகமும் கிருதியும் கம்பீர வனப்புடன் உயர்ந்த ரகமா யிருந்தன.

சில ராகங்கள் சில வித்வான்களிடம் தனிச் சிறப்புடன் சோபிக்கின்றன. ஜி. என். பால சுப்பிரமணியத்துக்கு அவ்வாறு அமைந் திருக்கும் சில ராகங்களில் முதல் ஸ்தானம் பெற்றிருப்பது பைரவி. 13உ. சென்னையில் அதையே அவர் ராகம், தானம், பல்லவி நிகழ்ச்சிக்கு எடுத்துக் கொண்டார். எனவே, கச்சேரிப் பொருத்தத்தையும் அழகையும் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை. அத்துடன் ராஜமாணிக்கம் பிள்ளையின் வாசிப்பும், பாலக்காடு மணியின் மிருதங்க மும் வில்வாத்ரி அய்யரின் கடமும் பக்க வாத்யங்களாகச் சேர்ந்தன. ராகதானங் களில் பாடகருக்கு இயல்பான பிர்க்காப் பொழிவுக்குக் குறைவில்லை. அதோடு அவை போதிய வளைவு குழைவுகளும் கொண்டு பாவம் நிறைந்து உருக்கமா யிருந்தன. 'கூட்டாரங்கிரி வேலவன் குஞ்சரி மணவாளன்' என்ற பல்லவியில் அரிய வேலைப்பாடுகளுடன் ஞானச் சிறப்பை நன்கு விளக்கினர்.

16உ. சென்னையில் எஸ். வி. பார்த்தசாரதி யின் முழுநேரக் கச்சேரி எதிர்பார்த்தது போல் கலகலப்பா யிருந்தது. சாவேரியும் காம்போதியும் முதல் ஸ்தானத்துக்குப் போட்டி யிட்டன. லதாங்கி ராகம் வனப்பா யிருந்தது. 'எடு நம் மிரு.' 'ஸ்ரீ ரகுவராப்ர' கிருதி களில் நிரவல் ஸ்வரங்கள் ரொம்ப ஜோரா யிருந்தன.

*

சென்னையில், 11உ. பாடிய கே. அரவாமுதன் கானத்தில் நாட்டை, ஸஹானா, கல்யாணி ராகங்களும் உருப்படிகளும் தரமாயிருந்தன. பல பிடிகளும், பாடும் முறையும், டைகர் வரதாசாரியாரின் வழியை நினைவூட்டின. பாடியவர் அப்பெரியாரின் சிஷ்யர்தான். ஆனால் சாரீரத்தைக் கொடுக்கும் பாணியில் கூட, வயதான குருவை இளைஞரான சிஷ்யர் பின்பற்ற வேண்டுவது அவசியமா என்று யோசிக்க வேண்டும்.

14உ. சென்னையில் சாவித்திரி ஸ்ரீனிவாசன் பாடினார். கல்யாணியும் ராகமாலிகையும், உருப்படிகளும், பாவப் பொழிவுடன், அழுத்த மும் ஸ்வரூபத்தெளிவும் கொண்டு, பாடகியின் ஞானத்தையும், சாதகச் சிறப்பையும் நன்கு எடுத்துக் காட்டின.

17உ. சென்னையில் பாலூர் வெங்கட் ராமய்யர், கனக சபாபதி அய்யர் என்ற சகோதரர்கள் பாடினார்கள். நாமக்கல் சேஷய்யங்காரின் சிஷ்யர்களான இவ்விரு வரும் சேர்ந்து பாடிய கானம் உண்டு. ஆனால் அன்று தனித் தனியாகத்தான் பாடினார்கள். ஒருவர் பிற்பகலிலும் மற் றொருவர் மாலையிலும் கச்சேரி செய்தார்கள். இருவருக்கும் நல்ல ஞானம். முன்னவரது அசாவேரியும், நாட்டக்குறிஞ்சியும் பின்ன வரது அடாணா, கல்யாணி ராகங்களும் மிகவும் தரமா யிருந்தன.

அன்றைய நிகழ்ச்சிகளில் அபிராம சுந் தரியின் வயலின் கச்சேரியும் குறிப்பிடத் தக்கது. முகாரி, பிலஹரி, கமாஸ் ராகங் களும், கண்டா ராக உருப்படியும் சுகமா யிருந்தன.

17உ. திருச்சியிலிருந்து கேட்ட எஸ். அலமேலுவின் கானமும் கவனத்தை இழுத் தது. வசந்தாவும், பைரவியும் நல்வடி வங்களா யிருந்தன.

18உ. சென்னையிலிருந்து மதுரமும், வெகு சரளமான உருவுபாடியும் கொண்டு, ராகங் களையும், உருப்படிகளையும், அனு பவபூர்வமாய் வழங்கிய ஒரு பெண் மணியின் கானம் கேட்டது. பாடியவர் பி. எஸ். சரஸ் வதி. காருண்யப்ரிய விஜய நாகரி ராகங்கள் வனப்பா யிருந்தன. சுத்த சாவேரி நெஞ்சைக் கவர்ந்து கொண்டிருந் தது. அவசரப் படாமல், சஞ் சாரங் கொடுக்கப் பயிற்சி செய்து, ஒழுங்குபடுத்தி அழுத்தமாய்ப் பாடினால் இவ ரது கானம் இன்னும் நன்றாகச் சோபிக்கும்.



எஸ். அலமேலு

# கிடைப்பது சொற்பமே யாகும்போது

# —சிறந்தவைகளையே பார்த்து வாங்குங்கள்!

இந்தியாவில் எல்லா மில்லுகளையும் போலவே நாங்களும், சர்க்கார் கட்டுப்பாடுகளனுசரித்து முக்கியாவசியமான துணி ரகங்கள் மட்டுமே தயாரித்து வருகிறோம். எனினும், எங்களது தற்பொழுதைய ட்ரில்கள், ட்வில்கள், கோட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள், லாங்கிலாத்து — எல்லாம், பக்கிங்ஹாம் & கர்னடிக் மில்ச் சரக்குகளின் நிரந்தர எடுத்துக்காட்டுகளா யிருந்து வந்துள்ள அதே உழைப்புத் தன்மையும், இழை நேர்மையும் வாய்ந்ததுகள்தான்.

உலகினெங்குமே தலைவிரித்தாடும் இந்த ஜவுளிப் பஞ்சத்தின்போது, கிடைக்கும் சொற்பத் துணிமணிகளைக் கொண்டு இன்னும் பல காலம் சமாளித்து வருவதை விடுத்து நம்மவருக்கும் வேறு கதிமோக்ஷமில்லை. இப் பஞ்சகாலத்தில், உங்கள் பணத்திற்குச் சிறந்த பெறுமதி கிடைக்க, கீழே காணும் வர்த்தக முத்திரைகளை அறிகுறியாகக் கொண்ட பக்கிங்ஹாம் & கர்னடிக் மில்ச் சரக்குகளையே, சாத்தியமாகும்போதெல்லாம் மறவாமல் வாங்குங்கள்.



**யுத்தகாலம்**

சென்ற ஆறுண்டுகளில் நாங்கள் சர்க்காருக்கு 48,20,00,000 கஜம் துணி சப்ளை செய்திருக்கிறோம். ஆனது, யுத்த காரியங்களுக்காக வுள்ள எங்களது துணி யுற்பத்தி வருடத்தில் 41·000 மைலெனக் காட்டுகிறது. ஏழெட்டு மாதம் கூடுகையிலுள்ள உற்பத்தியானது நம் பூமியை ஒருதரம் சுற்றிக் கட்டப் போதுமான நீளம் வருமென்றால் பாருங்களேன்!



பக்கிங்ஹாம் & கர்னடிக் மில்தான் 1900-ல் இந்தியாவில் காக்கித் துணி நெசவை முதன் முதலாக ஆரம்பித்தவர்கள். யுத்தகாலத்தில் அவர்கள் எப்போதும், ஏராள பொறுப்பை மேற்கொள்ளத்தான் செய்கிறார்கள்.

**சமாதான காலம்**

எங்களது இன்றைய உற்பத்தியளவு மாதம் 60,00,000 கஜங்களுக்கு மேலாகவே வரும். ஆனால் ரயில் போக்கு வரவுக் கஷ்டங்களால், சில தூர ஸ்தலங்களுக்கு எங்களால் சரக்குகள் தாராளமாக விநியோகிக்க முடியவில்லை. இரசாயனப் பொருட்களுக்கும் சாயங்களுக்கும் ஏற்பட்டுள்ள பஞ்சம் காரணமாக, யுத்தத்திற்கு முன் ஜனங்களின் மனதைக் கொள்ளை கொண்டிருந்த அனேக ரகங்களும், மற்றும் பற்பல கலர் டிசைன்களும் தயாரிப்பது சாத்தியமாகாம லிருக்கிறது. ஆனால், இந்தத் தடை தாற்காலிகமென்றே நம்புகிறோம்.

இதற்கிடையே, நாங்கள் ஏராளமாகத் தயாரிக்கும் அவசிய துணி ரகங்கள் உங்கள் உபயோகத்திற்குகந்தவைதான்-நீடித்துழைக்கவும் செய்யும்.

சர்க்கார் கட்டுப்பாடு அமுலுக்கு வருவதற் கெத்தனையோ முன்பு, நாங்கள் விலைகளை மலிவாக்கியே யிருந்தோம். எங்கள் சரக்குகள் கட்டுப்பாடு விலைகளில், உங்கள் பணத்திற்குச் சிறந்த பெறுமதியாகவே இன்னும் பெரும்பாலு மிருந்து வருகின்றன.

## தி பக்கிங்ஹாம் & கர்னடிக் கம்பெனி, லிட்.,

## சென்னை

மானேஜிங் ஏஜன்டுகள்: **பின்னி & கோ., (சென்னை) லிட்.**



# யசோதரா

ஆசிரியர்: விச்வம்பரநாத் கௌசிக்

மொழி பெயர்ப்பு: ரா. வீழிநாதன்

ராமநாத பாபுவுக்காவது தம் மனதில் உள்ளவற்றைப் பிறரிடம் சொல்லி ஆற்றிக் கொள்ள வசதி கிடைத்திருந்தது. ஆனால் யசோதாராவுக்கு அந்த வசதிகூட இல்லை. அவளுடைய மனம் உள்ளுக்குள்ளேயே குமுறிக் கொண்டிருந்தது. உலகமே அவளுக்கு 'வெறிச்' சென்று தோன்றியது. ராமநாத பாபுவின் கையில் தன் வாழ்க்கை இன்பம், வருங்காலம் அனைத்தையுமே ஒப்படைத்துவிட்டுத் தான் நிம்மதியாக இருக்கப் போவதாகக் கனவு கண்டுகொண்டிருந்த யசோதாராவின் உள்ளத்தில், ராமநாத பாபுவின் செய்கை அதிர்ச்சியை உண்டாக்கியது. இருந்தாலும், அவள் ராமநாத பாபுவின் மீது வைத்திருந்த அன்பும் மதிப்பும் சற்றும் குறையவில்லை. அவள் எல்லாவற்றுக்கும் தன் தலை விதியை நொந்து கொண்டாளே தவிர, குற்றத்தை ராமநாத பாபுவின்மீது சுமத்தவே இல்லை.

கல்யாணத்திலிருந்து திரும்பி வந்த ஐந்தாம் நாளன்றைக்கே ராமநாத பாபுவுக்குச் சாந்தி முகூர்த்தம் வைக்கப்பட்டிருந்தது. யசோதாரா காலையில் எழுந்தது முதல் ராமநாத பாபுவின் புது மனைவிக்கு ஊழியம் செய்வதில் ஈடுபட்டாள். இதைப் பார்த்த சம்பாவதி, "நீ இந்த வேலையெல்லாம் செய்வானேன்?" என்று கேட்டாள்.

"என் மனதிற்குப் பிடித்த காரியத்தைச் செய்கிறேன். அதனால் என்ன, சம்பா?" என்று வருத்தம் தோய்ந்த புன்முறுவலுடன் பதில் அளித்தாள் யசோதாரா.

அந்தச் சமயம் அவ்வழியே வந்து கொண்டிருந்த தன் தாயாரைக் கூப்பிட்டு, "அம்மா! ஜஸ்ஸோ, வேலைக்காரி செய்ய வேண்டிய வேலையைக்கூடத் தானே செய்கிறாள். சொன்னால் கேட்க மாட்டேன் என்கிறாள். இப்படி இருந்தால் உடம்பு என்னத்துக்கு ஆகும்!" என்றாள் சம்பாவதி.

"ஜஸ்ஸோ, வீட்டிலே இவ்வளவு வேலைக்காரிகள் இருக்கும்பொழுது எதற்காக நீ சிரமப்படுகிறாய்? வேண்டாம், சொல்வதைக் கேள்" என்றாள் சம்பாவதியின் தாயார்.

"நான் செய்யப் போவதெல்லாம் இன்றைக்கு ஒரு நாள்தானே! நாளைக்கெல்லாம் நான் என்ன செய்யப் போகிறேன், அதற்கு?" என்று சொல்ல ஆரம்பித்த பொழுது, யசோதாராவின் கண்களில் நீர் மல்கியது. அதை மறைக்க எண்ணி அவள் தலை குனிந்தாள்.

அன்று மாலை யசோதாரா புது மாட்டுப் பெண்ணுக்குத் தலை பின்னிவிட உட்கார்ந்தாள். தலை வாரிக்கொண்டிருக்கும் பொழுதே அவள் தன்னை மறந்துவிடுவாள். அவளுடைய கைகளும் தலை சீவுவதை நிறுத்திவிடும். "இதென்ன, நீ தலை சீவுவதை நிறுத்தி விட்டாயே! எவ்வளவு நேரம்தான் இப்படி உட்கார்ந்திருப்பது? எனக்கு இடுப்பை வலிக்கிறதம்மா!" என்று ராமநாதபாபுவின் புது மனைவி சொல்லும் பொழுதுதான் அவளுக்குத் தன் உணர்வு வரும். உடனே, அவசர அவசரமாகத் தலை சீவத் தொடங்குவாள்.

இதையெல்லாம் கண்ட ராமநாத பாபுவின் புது மனைவி, "ஒருவேளை இவள் அரைப் பைத்தியமாயிருப்பாளோ!" என்று கூட எண்ணினாள்.

தலை பின்னி முடிந்ததும் "நீ பாக்கியசாலி, அம்மா!" என்றாள் யசோதாரா.

"ஏன்?" என்று வியப்புடன் கேட்டாள் ராமநாத பாபுவின் புது மனைவி.

யசோதரா புன்முறுவலுடன், "இல்லா விட்டால் நீ இந்த வீட்டில் வாழ்க்கைப்பட்டிருக்க முடியுமா?" என்றாள்.

"போடி, போ!" என்று சொல்லி விட்டுப் புது மாட்டுப் பெண் எழுந்தாள்.

"சற்று இரு, அம்மா!" என்றாள் யசோதரா.

"ஏன்?"

"வகிடு எடுத்து விடுகிறேன்!"

"இன்னுமா உட்காராணும்? இவ்வளவு நேரம் உட்கார்த்தி வைத்துத்தான் உயிரை வாங்கிவிட்டாயே!" என்று புன்முறுவலுடன் சொல்லி விட்டு மறுபடியும் உட்கார்ந்தாள், ராமநாதபாபுவின் மனைவி.

"அதுதான் பதிலுக்கு என் பிராணனையே உனக்குத் தருகிறேனே!"

"நான் கேட்டேனா? நீயாகத்தானே செய்கிறாய்?"

இதைக் கேட்ட யசோதரா, சிரித்துக் கொண்டே அவளுக்கு வகிடு எடுத்து விட்டாள். பிறகு குங்குமச் சிமிழை எடுத்து வந்து அவளுடைய நெற்றியில் அழகாகப் பொட்டும் வைத்தாள்.

ராமநாதபாபுவின் மனைவிக்கென்று தான் வாங்கி வந்திருந்த இருநூறு, இருநூற்று ஐம்பது ரூபாய் பெறுமானம் உள்ள புட-



வையைக் கொண்டு வந்து கொடுத்து, அவளை உடுத்திக் கொள்ளவும் செய்தான். சகல அலங்காரங்களும் முடிந்த பிறகு, யசோதாரா புது மாட்டுப் பெண்ணை ஒரு தடவை நன்றாகப் பார்த்துவிட்டு, "இன்றைக்குப் பாரேன்! பாபுஜி உன்னைக் கண்டதும் மதிமயங்கிவிடப் போகிறார்!" என்றான்.

இதைக் கேட்ட அவள் புன்முறுவலுடன் வெட்கித் தலை குனிந்தாள்.

* * *

அன்றிரவு ராமநாதபாபு தன் புது மனைவியிடம், "இந்தப் புடவை உனக்கு ஏது?" என்று கேட்டார்.

"இதுவா? ஜலஜோ வாங்கிக் கொடுத்தது!" என்றான் அவள்.

"அப்படியா!"

ராமநாதபாபு அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை. அவருடைய முகம் வாட்டமுற்றது. தன் மனப்போக்கில் லயித்துவிட்டார். அதே சமயம் அவருடைய மனைவி, "ஆமாம், இந்த ஜலஜோ யார்?" என்று கேட்டாள்.

"யாரோ எனக்குத் தெரியாது!" என்று ஏதோ நினைவில் பதில் அளித்தார் ராமநாத பாபு.

"என்ன! உங்களுக்கு அவளைப் பற்றி ஒன்றுமே தெரியாதா?"

அதற்குள் தன் சுய உணர்வை யடைந்த ராமநாதபாபு, "அவனா? அவன் டாகுர் ஜாதிப் பெண். அவளுடைய அப்பா வீட்டிலே சண்டை போட்டுக் கொண்டு ஓடி வந்துவிட்டான். நம் வீட்டிலே வேலை பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு அவளுடைய தாத்தா வந்து எல்லாரையும் அழைத்துக்கொண்டு போய் விட்டார்!" என்றார்.

"அப்படியா? அவன் ரொம்ப நல்லவன்! இன்று எனக்குத் தலைவாரிப் பின்னிவிட்டது, டிரஸ் செய்துவிட்டது எல்லாமே அவன்தான்! இதுமாதிரி வேறு யார் கண்ணுக் கருத்துமாகச் செய்யப் போகிறார்கள்!" என்றான் அவருடைய மனைவி.

இதைக் கேட்டதும் ராமநாத பாபுவின் உள்ளத்தில் பழைய நினைவுகள் தோன்றின. "ஜலஜோ எவ்வளவு உயர்ந்தவள்! நான் எவ்வளவு நீசன்! இது மாதிரி நான் அவசரப்பட்டது நியாயமா?" என்ற எண்ணம் எழுந்து அவருடைய உள்ளத்தை வாட்டியது. மின்சார ஒளி வீசிக் கொண்டிருந்ததும் வெகு அழகாக ஜோடிக்கப்பட்டிருந்ததுமான அறையில், மிகவும் ரமணீயமான மலர் மெத்தையில் பூரணப் பொலிவுடன் விளங்கிக் கொண்டிருந்த தன் புது இளம் மனைவியுடன் உட்கார்ந்திருந்த பொழுதுங்கூட, அவருடைய மனம் பாலைவனத்தில் வழி தெரியாமல் திக்கு முக்காடிக் கொண்டிருப்பது போன்ற உணர்ச்சியை அனுபவித்தது. நாற்புறங்களிலும் சிருங்கார சாமக்கிரியைகள் சூழ்ந்திருந்தும், அவருடைய உள்ளத்தில் வைராக்கியமே மேலோங்கி நின்றது.

ராமநாத பாபுவின் முகபாவத்தைக் கவனித்துக்கொண்டுவந்த அவருடைய மனைவி, புது மாட்டுப் பெண்ணுக்கு இயற்கையாக உள்ள நாணத்தின் காரணமாக அங்கொன்றும் கேட்கவில்லை. பேசாமல் தலை குனிந்தபடி உட்கார்ந்திருந்தாள்.

ராமநாத பாபு, "நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும் என்பது எவ்வளவு உண்மையாகப் போய்விட்டது! நான் அவளைக் கல்யாணம் செய்து கொண்டுவிட வேண்டும் என்று எவ்வளவோ முயன்றேன், என் எண்ணம் நிறைவேறவில்லையே! நம் தலையில் எழுதிய எழுத்து இதுதான் போலும். பாவம், ஜலஜோவின் மனம் எப்படிக் கொதிக்கிறதோ! அவள் தலையில் கஷ்டம் அனுபவிக்க வேண்டும் என்றுதான் எழுதியிருக்கிறப் போலிருக்கிறது! எனக்கும்தான் என்ன? என் உள்ளத்தில் ஏற்பட்டிருக்கும் இந்த வடு சாகும் வரையில் மறையுமா?" என்றெல்லாம் சிந்திக்கலானார்.

* * *

அங்கே, வேறொரு அறையில் சம்பாவதியுடன் யசோதாரா படுத்துக்கொண்டிருந்தாள். அவளுக்குத் தூக்கமே வரவில்லை. அவள் படுத்தபடியே, "ராமநாத பாபுவின்மீது சிறிதும் குற்றமே இல்லை. அவர் என்னை மணக்துகொள்கிறேன் என்று சொல்லி அனுப்பினார். தன்னாலான முயற்சியைச் செய்துதான் பார்த்தார். ஆனால் அவர் எண்ணியபடி திருட்டுக் கல்யாணம் செய்துகொள்வது எனக்குச் சிறிதும் சரியாகப் படவில்லை. என்னுடைய தாத்தா-பாட்டிக்கோ, அல்லது அவருடைய அப்பா-அம்மாவுக்கோ தெரிந்து செய்வது என்றாலும் அவர்கள் சம்மதிக்க மாட்டார்கள். எனக்கும் அவருக்கும் நிச்சயம் கல்யாணம் நடக்கவே நடக்காது. நான் இந்த வீட்டில்

காலடி எடுத்து வைத்த வேளை நல்ல வேளையில்லை. இல்லாவிட்டால் இப்படி வருத்தப் படும்படி நேரிடுமா?" என்று சிந்தித்துக் கொண்டிருந்தான்.

அதே சமயம் சம்பாவதி, யசோதாராவின் பக்கம் திரும்பிப் பார்த்து, "ஜஸ்லோ, உனக்கு எப்பொழுது கல்யாணம் ஆகப் போகிறது?" என்று கேட்டான்.

யசோதரா ஒரு பெருமூச்சுடன், "எனக்கா? இந்த ஜன்மத்தில் எது கல்யாணம்?" என்றாள்.

"என்?" என்று வியப்புடன் கேட்டான் சம்பாவதி.

"பிச்சைக்காரியை யார் அம்மா கல்யாணம் செய்து கொள்வார்கள்?"

"பிச்சைக்காரியா! இதென்ன கூத்து?"

"உங்கள் வீட்டு வாசலில் நான் பிச்சைக்கு வந்து நிற்கவில்லையா?"

"அது ஒரு காலம்! இப்பொழுது நீ ஜமீன்தாரிணி என்பது ஞாபகமிருக்கட்டும்!"

"அதெப்படி? பிச்சைக்காரி, எப்பொழுதுமே பிச்சைக்காரிதானே!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை!"

"உனக்கு என்ன தெரியும்? இந்த உலகம் நீ நினைக்கிறதுபோல் நினைக்காது!"

"உன் மூளை குழம்பிப் போய் விட்டதா, என்ன? ஜன்மம் பூராவும் கல்யாணம் ஆகாமல் எப்படி இருக்க முடியும்?"

"பார்த்துக்கொண்டே வாயேன்! நான் சொல்கிறபடி நடக்கிறதா, இல்லையா என்று!"

"என்னத்தைப் பார்க்கக் கிடக்கிறது? உன் அப்பாவும் தாத்தாவும் உன்னைக் கன்னிப் பெண்ணாகவே இருக்க விட்டு விடுவார்களா? சொல்லு."

"ஆமாம், யாருமே என்னைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லி விட்டால், அவர்களால்தான் என்ன செய்ய முடியும்?"

"உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள மாட்டேன் என்று எந்த மடையனும் சொல்ல மாட்டான்!"

"நான் என்ன, அவ்வளவு அழகா?"

"உன் அழகுக்கு என்ன குறைச்சல்? குலத்தில்தான் குறைந்தவளா? இல்லை, பணத்தில்தான் குறைந்தவளா? உன்னை யாராவது ஒருவன் வந்து கொத்திக் கொண்டு போய் விடுகிறானா, இல்லையா என்று பாரேன்!"

"எதற்கும் பாக்கியம் வேண்டும், சம்பா! என்னைப் போன்ற துர்ப்பாக்கியவதியை

யார்தான் கல்யாணம் செய்துகொள் வார்கள்?"

"உன்னோடு பேச என்னால் முடியா தம்மா! எதற்கும் குதர்க்கம் செய்தால் யாரால்தான் பதில் சொல்ல முடியும்?" என்று அலுத்துக் கொண்டாள் சம்பாவதி.

யசோதரா பெருமூச்சுடன் மௌனம் சாதித்தான். பிறகு சிறிது நேரத்திற் கெல்லாம், "உனக்கு எப்பொழுது கல்யா ணம், சம்பா?" என்று கேட்டான்.

"அப்பா, அம்மா நினைக்கிறபொழுது!"

"என்னை உன் கல்யாணத்திற்கு அழைப்பாயோ, இல்லையோ?"

"நீ உன் கல்யாணத்திற்கு என்னை அழைத்தால், கட்டாயம் நானும் என் கல்யாணத்திற்கு உன்னை அழைப்பேன்!"

"எனக்குக் கல்யாணம் நடந்தால்தானே உன்னைக் கூப்பிடுவதற்கு?"

"போதும். போ! உன்னோடு நான் பேசத் தயாராயில்லை!" என்று சொல்லி விட்டு, சம்பா திரும்பிப் படுத்துக் கொண் டாள். சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் தூங்கிவிட்டான்.

## 30

கல்யாணமான ஒரு வாரத்திற் கெல் லாம் நந்தராம் தன் ஊருக்குப் போக வக்கீல் சியாமநாத பாபுவை அனுமதி கேட்டான்.

"அதற்குள் என்ன அவசரம், நந்து? இன் னும் சில நாள் இருந்துவிட்டுப் போனால் போச்சு!" என்றார் சியாமநாத பாபு.

"இருக்கலாம்; ஆனால் வீட்டில் வேலை இருக்கிறது. அப்பாவும் கவலைப்படுவார். அம்மாவுக்குக் கண் தெரியவில்லை யல்லவா? ஜன்னோதான் அவளைக் கவனித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதனால் தான் போக வேண்டு மென்கிறேன்."

"சரி, அப்படியானால் நான் உன்னைத் தடுக்க வில்லை. ராமநாத், நாளைக்கு நந்து ஊருக்குப் போக வேண்டுமென்கிறான். அதற்கான ஏற்பாடுகளைச் செய்து விடு!" என்றார் சியாமநாத பாபு, தம் பிள்ளையிடம்.

நந்தராம் ஊருக்குப் போய்விடப் போகி றான் என்பதை அறிந்ததும், ராமநாத பாபு வின் இதயத்திலிருந்து ஒரு பெரிய சுமை இறங்கியது போலிருந்தது. ஏனெனில், யசோதரா அவருடைய வீட்டில் இருந்தது அவருக்கு மிகவும் சிரமத்தை அளித்தது. உள்ளே தம் இஷ்டப்படி வந்து போக முடியவில்லை. "யசோதராவைத் தனியே சந்தித்துப் பேச நேர்ந்துவிட்டால்!" என்ற பயம் அவர் உள்ளத்தில் எப்பொழு தும் குடிகொண்டிருந்தது. ராமநாத பாபு அவளை மறக்க எவ்வளவோ முயன்றார்; முடியவில்லை. யாராவது "ஜன்னோ!" என்று கூப்பிட்டாலோ, அல்லது எங்கே யாவது அவளைப் பார்த்து விட்டாலோ, அவருடைய மனத்தில் பழைய நினைவுகள் எழுந்து துயரத்தை அளித்து வந்தன. ஆகையால் யசோதரா ஊருக்குப் போய் விட்டால்தான் நல்லது என்று அவர் எண்ணினார்.

ஒரு காலத்தில் யசோதராவைத் தம் முடைய வீட்டிலேயே வைத்துக் கொண்டு விட வேண்டுமென்பதற்காக அவர் அரும் பாடு பட்டதுண்டு. இன்று அதே யசோ தரா தம்முடைய வீட்டிலிருந்து சீக்கிரம் தொலைந்தால் சரி என்று அவர் எண்ணி னார். என்ன மன மாறுதல்! அது அவருக்கே வியப்பை அளித்தது. தனிமை யில் உட்கார்ந்து இதைப் பற்றியே சிந்திக்க லானார். கடைசியில், "நான் காலத்திற்கு அடிமை. காலம் ஆட்டி வைத்தபடி யெல் லாம் ஆடவேண்டியவன்!" என்ற முடி வுக்கு வந்தார்.

மறு நாள் மத்தியானம் நந்தராமும் யசோதராவும் புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தனர். சம்பாவதி யசோதராவைத் தனிமையில் சந்தித்தபொழுது, "நீ மீண்டும் எப் பொழுது வருவாய்?" என்று கேட்டாள்.

"பிழைத்துக் கிடந்தால் உன் கல்யா ணத்திற்கு வர மாட்டேனா?" என்றான் யசோதரா.

"அதற்கு முன்னால் ஒரு தடவை கூட வர மாட்டாயா?"

"எங்கே அம்மா, முடியப் போகிறது? நீதான் எங்கள் ஊருக்கு ஒரு தடவை வாயேன்!"

"முடிந்தால் வருகிறேன். அப்பா, அம்மா போகவிட வேண்டாமா?"

"அதெல்லாம் போகவிடுவார்கள். நான் அவர்களுக்குக் கடிதம் எழுதுகிறேன். நீ வரும்பொழுது மன்னியையும் அழைத்துக் கொண்டு வா!" என்றான் யசோதரா.

"சரி, பார்க்கிறேன்!" என்று கூறி விட்டுச் சம்பா தன் காரியத்தைக் கவனிக்கச் சென்றாள். (தொடரும்)

# உல்லாசப் பொழுது போக்குக்குப் பங்கீடு கிடையாது!

வெகுச் சமீப காலம் வரை சொற்பம் சில அதிர்ஷ்டசாலிகளுக்கு மட்டுமே தமது வீடுகளில் ரேடியோ விருந்து உண்டு களிக்க முடிகிற காரியமாயிருந்தது. ஆனல் பீப்பிள்ஸ் ஸெட்டின் ஆகமனத்தோடு கூட, இப்பொழுது சிறிய வருமான முடையவர்களுக்கும் சொந்தத்தில் ரேடியோ வாங்கி வைத்துக்கொண்டு உல்லாசமாகப் பொழுது போக்க சாத்தியமாகி யுள்ளது.

## 'தி பீப்பிள்ஸ் ஸெட்'

### கவர்ச்சிகரமான அம்சங்கள்

1. சிறிய வருவாய்க்காரர்களின் சக்திக்குத்தக்கப்போல் மலிவான விலை.
2. அதிகப்படியான உழைப்பு.
3. சுளுவாக வேலை செய்விக்கலாம்.
4. குறைந்த கரண்டு செலவு.
5. வாயுமண்டல சம்பந்தமான தொந்தரவே கிடையாது.
6. கிராமபோன் ஆம்ப்ளிபையராகவும் வேலை செய்கிறது.



**தி நாஷனல் ரேடியோ & எஞ்ஜினியரிங் கோ., லிட்.**

விநியோகஸ்தர்கள் — மெஸ்ஸர்ஸ் பஸல்பாய் லிமிடெட்.

"......'என்னைப் போன்ற தாரமிழந்தவன் கதிதான் என்ன?' என்று நீ என்னைக் கேட்கலாம். அந்தக் கேள்விக்கு என்னுடைய பதில் இதுதான்: 'கணவனை இழந்தவளுக்கு வாழ்க்கை முறை வகுக்க வல்லவர்களே அதற்குப் பதில் சொல்லட்டும்!'......"



# மறு மணம்

"சம்பத்"

"விசாலாட்சி! நானும் ஒரு வருஷமாய் வரனுக்கு அலைகிறேன், என் மனத்திற்குத் திருப்தியாக ஒரு இடமாவது கிடைக்கவில்லை. நாலு காசு சம்பாதிக்க வகை தெரியாதவன்கூட, 'நாலாயிரத்தைக் கொண்டா, ஐயாயிரத்தைக் கொண்டா!' என்கிறான். என் நிலைமையோ உனக்குத் தெரிந்ததே. எனக்குக் கிடைக்கும் சொற்பச் சம்பளம் குடும்பச் செலவுக்கே போதவில்லை. கதா காலக்ஷேபம் செய்து ஜீவனம் நடத்திய நம் தகப்பனாரோ ஒரு குழி நிலங்கூட நமக்குத் தேடி வைக்கவில்லை. இந்த நிலையில் நான் என்ன செய்வது? மனூரில் நல்ல வரன் ஒன்று இருப்பதாகக் காலையில் கேள்விப்பட்டேன். பெயர் நடேசய்யராம்; நாலு காணி நிலம் இருக்கிறதாம், ஒரு வீடும், கொஞ்சம் ரொக்கமும்கூட உண்டென்று சொல்லுகிறார்கள். நமக்கு ஒரு செலவுமில்லாமல் அவரே கல்யாணத்தை நடத்திக் கொள்ளுகிறாராம். மனுஷன் தங்கக் கம்பி, சாந்த குணமுள்ளவர் என்றெல்லாம் கேள்விப்படுகிறேன். உன் அபிப்பிராயம் என்ன?" என்றான் மகாதேவன்.

"இவ்வளவு நல்ல இடத்துச் சம்பந்தம் நமக்குக் கிடைக்குமா, அண்ணா? இதற்கு என்னைக் கேட்பானேன்? உனக்குப் பிடித்திருந்தால் சரி!" என்றாள் விசாலாட்சி.



"எனக்குப் பிடித்துத்தான் இருக்கிறது. ஆனால், இந்த ஆவணிக்கு அவருக்கு வயது நாற்பத்தொன்று ஆகிறதாம். மூத்தவள் ஆறு மாதத்துக்கு முன்புதான் தவறி விட்டாளாம். ஆறு வயதில் அவருக்கு ஒரு பெண் குழந்தைகூட இருக்கிறதாம்! அதுதான் சற்று யோசிக்க வேண்டியதாயிருக்கிறது!"

இதைக் கேட்டதும் விசாலத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது. "அவருக்கு வயது நாற்பதுக்கும் மேலா? இரண்டாம் தாரமா?" என்று நினைக்கும்போதே அவள் கண்கள் கலங்கின. மகாதேவனுக்குத் தர்மசங்கடமாகப் போய் விட்டது. அதற்கு மேல் அவனால் ஒரு நிமிஷங்கூட அங்கே நிற்க முடியவில்லை.

"ஏன் கலங்குகிறாய்? நன்றாக யோசனை செய்து பார். நாளைக்குப் பதில் சொன்னால் போதும்!" என்று சொல்லிவிட்டுக் கவலை தேங்கிய முகத்தினனாய்த் தன் சகோதரியை யோசனையில் ஆழ்த்தி விட்டு வெளியே சென்று விட்டான்.

"வயது நாற்பத்தொன்று என்கிறார்களே, பார்வைக்கே அவர் கிழவராக இருப்பாரோ? அவரைப் பற்றிக் கேட்டதும் எனக்கு அப்பா, சித்தப்பா போன்ற பெரியவர்களின் ஞாபகம்தான் வருகிறது; பயம், பக்தி, மரியாதை முதலிய உணர்ச்சிகளே தோன்றுகின்றன! ஒரு பரபரப்பா, உத்சாகமா எதையும் நான் அடையவில்லையே!

ஹூம்......என்ன செய்வது? என் சுகத்தையே பெரிதெனக் கருதி, என் அருமைத் தமையனுக்கு நான் இன்னும் எத்தனை காலம்தான் கஷ்டத்தைக் கொடுத்துக் கொண்டிருப்பேன்? நடப்பது நடக்கட்டும். ஈசன் விட்ட வழியென்று இருப்பதே சரி. இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்பட்டவர்களில்கூட ஒரு சிலராவது உலகத்தில் குறைவு ஒன்றும் இல்லாமல் வாழவில்லையா? எனக்கும் அப்படி நேரட்டுமே!" என்று எண்ணியவளாய் ஒரு மூலையில் உட்கார்ந்தாள் விசாலாட்சி.



சிறிது நேரத்திற்கெல்லாம் அவளுடைய அண்ணன் திரும்பி வந்தான். அவனைக் கண்டதும், புன் சிரிப்பையும் துணிவையும் எங்கிருந்தோ வரவழைத்துக் கொண்டு, "அண்ணா, நான் அவரையே கல்யாணம் செய்துகொண்டு விடுவது என்று நிர்மானித்து விட்டேன். நீ நாளைக்கே மதுர் சென்று எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டு வந்துவிடு!" என்றாள்.

2

நடேசய்யர் மதுரில் ஒரு சிறு மிராசுதார், தமக்குச் சொந்தமான நாலுகாணி நிலத்தை வைத்துக்கொண்டு, அவர் சிறும் செட்டு மாகக் குடித்தனம் செய்து வந்தார். ஆறு வயதுக் குழந்தையான காமுவையும் தம்மையும் தவிக்க விட்டுவிட்டு அவருடைய மனைவி கண்ணை மூடியதும் அவருக்குத் துக்கம் தாங்க முடியவில்லை. தனிமையில் விம்மினார்; பொருமினார்; ஏங்கினார். தம் மனைவியின் உத்தரக் கிரியைகளையெல்லாம் ஒருவாறு செய்து முடித்தார்.

குழந்தை காமுவைக் கண் கலங்க விடாது பாதுகாப்பதில் தம் முழுக் கவனத்தையும் செலுத்தினார் நடேசய்யர். நெருங்கிய பந்துக்கள் யாரும் அவருக்கு இல்லாமையால் தாமே சமையல் செய்து சாப்பிட்டும், குழந்தையைப் போஷித்தும் வந்தார். இவ்வாறு இரண்டு மூன்று மாதங்கள் அவர் காமுவுக்குத் தந்தையாகவும், தாயாகவும் விளங்கிய தன் பயன் என்னவென்றால், அந்தக் குழந்தைக்கு முதலில் அஜீர்ணம் உண்டாகிப் பிறகு அது கொடிய விஷக் கடுப்பாக மாறியதுதான்! மிகுந்த கவனத்துடன் வைத்தியம் செய்வித்தும், பத்தியம் மீறியாமல் ஆகாராதிகளைக் கவனித்தும் குழந்தையைக் காப்பாற்றுவதற்கு அவர் பட்ட பாடு கொஞ்ச நஞ்ச மல்ல.

நமது செல்வக் குழந்தையைக் கவனிக்க ஒரு பெண் துணை அவசியம் என்று அப்போதுதான் அவருக்குத் தோன்றியது. மறு மணம் செய்து கொள்ளும்படி நண்பர்கள் சிலர் அவருக்கு யோசனை கூறினர். ஆனால், அப்போது அவர் மனம் அதற்கு ஒருப்படவில்லை. அவ் வார்த்தை எழும் போதெல்லாம் தம் மனைவியின் எழில் கனிந்த முகம் அவர் முன் வந்து நிற்கும். மேலும், மாற்றாந்தாய் தம் குழந்தையைச் சரிவர நடத்த மாட்டாள் என்றும் அவர் அஞ்சினார்.

ஆனால், தம் பராமரிப்பு குழந்தைக்குப் போதியதாக இல்லை என்பதை அவர் உணர்ந்ததும், அவர் மனம் மாறத் தொடங்கியது. "சாந்த குணமுள்ள ஒரு ஏழைப் பெண்ணை மணந்து கொண்டாலென்ன? காமுவை அவள் தன் குழந்தையைப் போல நடத்துவாளாயின் அவளை ஒரு குறையுமில்லாமல் நான் ரட்சிப்பேன்!" என்று நிர்மானித்தார்.

அந் நிர்மானத்தின் பயனாகக் காமுவுக்கு விசாலாட்சி தாயாரானாள். நடேசய்யர் குடும்பக் கவலையினின்றும் விடுபட்டார். மகாதேவனுக்கும் தன் தங்கையைக் காப்பாற்றும் சுமை நீங்கியது.

3

அன்று பௌர்ணமி. நடேசய்யர் தம் வீட்டு முற்றத்தில் உட்கார்ந்து தாம்பூலம் தரித்துக் கொண்டிருந்தார். எட்டு வருஷம் மறுமண வாழ்க்கை நடத்தியதன் பலன் அவருடைய தோற்றத்தில் தெளிவாகக் காணக் கிடந்தது. இளந் தளர்ச்சி; பூரித்த உடல்; கவலை யற்ற முகம்; அமைதி நிரம்பிய உள்ளம்.



விசாலாட்சி வீட்டு வேலைகளை முடிக்கும் சமயம். நடேசய்யர், "உன்னைத் தானே, இங்கே வா! எவ்

வளவு நேரந்தான் வேலை யிருக்குமோ, தினமும்?" என்றார்.

"பாலுக்குப் பிரை யூற்றிவிட்டு இதோ வந்து விடுகிறேன்!" என்றாள் விசாலாட்சி.



எட்டு வருஷங்களுக்கு முன், நாம் பார்த்த விசாலாட்சியா இவள்? இப்பொழுது இவளிடம் எவ்வளவு மாறுதல்? பழைய விசாலாட்சியின் இளமையும், சுறு சுறுப்பும், இனிமையும் எங்கு போய் மறைந்தன? முப்பத்தைந்து வயது மதிக்கத் தகுந்த மாதாகவன்றோ இவள் இப்பொழுது காணப்படுகிறாள்! களங்கமற்ற அவள் முகத்தில் சாந்தம், திருப்தி, நன்றி, புனிதத்தன்மை ஆகிய யாவும் நிலவுகின்றன. ஆனால் இருபத்தைந்து வயதுப் பெண்ணொருத்திக்கு இருக்கவேண்டிய இளமை, விகாசம், பூரிப்பு, உல்லாசம் எதையும் இவளிடம் காணோம்!

"விசாலம்! நம் காமுவுக்கு வருகிற தை மாதத்திலாவது கலியாணம் செய்ய வேண்டாமோ?"

"இப்பொழுது என்ன அவசரம்? ஆவணிக்குத்தானே அவளுக்குப் பதின் மூன்று வயது நிரம்புகிறது?"

"வாஸ்தவந்தான்; ஆனால் உன் அன்பிலும், போஷணையிலும் அவள் மிகவும் உயர்ந்து விட்டாளே! நம் கலியாணத்தின் போது நீ இருந்ததைவிட அவள் இப்போது இன்னும் வளர்ந்து இருக்கிறாளே!"

இவ் வார்த்தைகள் விசாலத்துக்குச் சுருக்கென்று பட்டன. "நன்றா யிருக்கிறது!; என்னோடு அவளை என் ஒப்பிட்டுப் பேசுகிறீர்கள்?" என்று விசாலம் தன்னையும் மறந்து கூறினாள்.



நடேசய்யர் திடுக்கிட்டார். "என்ன சொல்லுகிறாய், நீ? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! உன்னையும் அவளையும் ஒப்பிட்டால் என்ன?" என்று கேட்டார்.

இதற்குள் ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்ட விசாலம், "நான் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள். நம் காமுவுக் கென்ன? நமக்கு அவள் ஒரு பாரமா? காசு, பணத்தைத் தான் நமக்குக் குறை யில்லாமல் கொடுத்திருக்கிறாரே, பகவான்!" என்றாள்.

"இன்று உன் பேச்சே புதுமையா யிருக்கிறது! நான் எந்த விஷயத்திலாவது உனக்குக் குறைவு செய்திருக்கிறேனா?"

"அப்படிச் சொன்னேனா, நான்? என் மீது தங்களுக்குள்ள அன்பிற்கும் எல்லை யுண்டோ?"

"அப்படியானால் நான் காமுவை என் உன்னோடு ஒப்பிடலாகாது?"

"திருப்பித் திருப்பி அதையே என் கேட்கிறீர்கள்? நான்தான் ஒன்றும் குற்றமாகச் சொல்லவில்லை யென்கிறேனே!"

"நீ எதையோ மறைத்துப் பேசுகிறாய்! காமுவின்மீது நீ அளவு கடந்த அன்பு வைத்திருக்கிறாய் என்று எனக்குத் தெரியும்; இவ்வூராருக்கும் தெரியும். அப்படியிருக்க நீ என் அவ்வாறு கூறினாய்?"

"மேலும் மேலும் அதையே கேட்கிறீர்களே! என் மனத்திலிருப்பது இன்னதென்று எனக்கே தெளிவாய்த் தெரியவில்லை. சொல்லித்தான் தீரவேண்டுமென்றால் சொல்லுகிறேன். நான் இரண்டாம் தாரமாக அல்லவா தங்களை மணந்தேன்? அதனால்தான் காமுவின் கலியாணப் பேச்சின்போது என் பெயரை எடுக்க வேண்டாம் என்றேன்!"

இவ் வார்த்தைகளைக் கேட்ட நடேசய்யர் திகைத்து விட்டார். பல எண்ணங்கள் அவருடைய உள்ளத்தில் தோன்றி மறைந்தன. ஒருவாறு தம்மைத் திடப்படுத்திக்கொண்டு அவர் சொல்லலானார்:

"விசாலம், உன்னை ஒரு குறைவு மில்லாமல் நடத்தி வருவதாகவே நான் இதுவரை எண்ணி வந்தேன். உன் முகம் ஒரு நாளாவது கோணி நான் பார்த்ததில்லை. ஆகவே, பூர

ணத் திருப்தியுடன் நீ வாழ்ந்து வருவதாகவே நான் இதுவரை நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் இப்போது நீ சொல்வதிலிருந்து உன் மனத்தில் ஏதோ ஒரு குறை எனக்கும் தெரியாமல் இருந்து வருவதாகத் தெரிகிறது. அதை இப்பொழுது எனக்கு நீ சொல்லித்தானாக வேண்டும்."

"என்னை இப்படிக் கட்டாயப்படுத்தினால் நான் என்ன செய்வது? உங்களை ஒன்று கேட்டால் கோபித்துக் கொள்ளாமல் பதில் சொல்லுவீர்களோ?"

"தாராளமாய்க் கேள். எப்பொழுதாவது நான் உன்னைக் கோபித்தது உண்டா?"

அவ்வளவுதான்; அடுத்த நிமிஷம், "நாங்களும், காமுவின் தாயாரும் நடத்திய வாழ்க்கையின் பூரண இன்பமும், இனிமையும் நம்முடைய வாழ்க்கையில் இருப்பதாக நீங்கள் மனப்பூர்வமாகச் சொல்ல முடியுமா?" என்ற ஆணித்தரமான கேள்வியைப் போட்டாள் அவள்!

நடேசய்யர் பதில் சொல்ல வகையறியாது திருதிருவென்று விழித்தார்!

## 4

**1924**-ம் வருஷ வெள்ளத்தை யார்தான் மறந்திருக்க முடியும்? காவிரியாற்றில் திடீரென்று வெள்ளம் வந்து கரை புரண்டோடியது. அணைக் கட்டுகள், மதகுகளெல்லாம் திறந்துவிடப் பட்டன. 'டெலிபோன்' மூலம் நிமிஷத்திற்கு நிமிஷம் வெள்ளத்தைப் பற்றிய செய்தி எல்லா இடங்களுக்கும் பறந்தது. ஆற்றங் கரையிலுள்ள ஊர் ஜனங்கள், "எப்போது என்ன நேருமோ?" என்று திகிலுற்றவர்களாய் மண்வெட்டி, கூடை, தீவட்டிகள் சகிதம் எச்சரிக்கையா யிருந்தனர். ஆயினும் என்ன பயன்? எத்தனையோ இடங்களில் உடைப்பு. ஆயிரக் கணக்கான ஏக்கர் நிலம் மண் மேடாயிற்று. வைக்கோற் போர்களும், ஆடு மாடுகளும் ஆற்றில் மிதந்து சென்றன. ஆங்காங்கு வெள்ளத்தில் மூழ்கி இறந்த மக்கள் பலர். அவ்வாறு இறந்தவர்களில் மகாதேவனின் மனைவியும் ஒருத்தி. மணல் மேடிட்ட நிலங்களில் நடேசய்யரின் நான்கு காணி நன்செயும் இடம் பெற்றது.

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு ஒரு நாள் நடேசய்யர் கவலை தோய்ந்த முகத்துடன் தம் மனைவியிடம், "விசாலம், சென்ற வருஷம் நாம் இருந்த இருப்பென்ன? இன்று நாம் இருக்கும் நிலை யென்ன? நிலம் போயிற்று; கையிலிருந்த தொகையும் செலவழிந்தது. ஒரு நல்ல இடத்தில் காமுவுக்குச் சம்பந்தம் செய்யவும் முடியாமல் இப்பொழுது தவிக்கின்றோம்! உன் சகோதரன் மகாதேவனோ, பாவம், மனைவியை இழந்து இரண்டு குழந்தைகளை வைத்துக் கொண்டு திண்டாடுகிறான்!" என்றார்.

"ஈசனே நம்மைத் தண்டித்தால் நாம் எங்கு போய் முறையிடுவது? ஏழைக் குடும்பத்தில் பிறந்த நான் ஏழையாகவே தான் வாழவேண்டுமென்பது ஈச்வரச் சம்மதம் போலும்! என் அண்ணா படும் கஷ்டத்தைப் பார்த்தால், நம் கஷ்டம்கூட எனக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. அவன் குழந்தைகளை இங்கே அழைத்து வந்து விட்டால் என்ன? ஏதோ, தன் கையாலானதை அவன் கொடுத்துவிட்டுப் போகிறான்!" என்றாள் விசாலாட்சி.

"நன்றாகச் செய்யலாம். அவன் எனக்கு இன்று ஒரு கடிதம்கூட எழுதியிருக்கிறான். குழந்தைகளைக் காப்பாற்றத் தன்னால் முடியவில்லை யென்றும், மறுமணம் செய்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லை யென்றும் சொல்லுகிறான்!"

"என்ன, மறு மணமா!"

"ஆமாம்; அவன் ஜாதகமும் காமுவின் ஜாதகமும் நன்றாகப் பொருந்தி யிருக்கிறதாம். 'நமக்குச் சம்மதமா?' என்று கேட்கிறான்!"

"உங்கள் கருத்து என்ன?"

"அப்படி யொன்றும் அவனுக்கு வயதாகி விடவில்லை. ஐம்பது, அறுபது என்றும் சம்பாதிக்கிறான். வேறு நல்ல இடம் பார்ப்பதற்கோ நாம் இப்போது சக்தியற்றவர்களா யிருக்கிறோம். மேலும், தசவிதப் பொருத்தமும் இருப்பதாகச் சோதிடர்கள் எல்லோரும் சொல்லுகிறார்களாம்......"

"அப்படியா! எல்லாப் பொருத்தமும் இருக்கிறது; வயதுப் பொருத்தம் மாத்திரம் இல்லை போலும்! மேலும், நம் சோதிட சாஸ்திரத்தில்தான் வயதுப் பொருத்தம் மட்டும் கூறப்படவில்லையே!— சரி, நீங்கள் அவனுக்குப் பதில் போட வேண்டாம். நானே எழுதிவிடுகிறேன்!" என்றாள் விசாலாட்சி

## 5

**ம**காதேவன் தெருவைத் தன் கண்களால் அளந்து கொண்டிருந்தான், தபாற்காரன் வருகைக்காக அவன் எதிர்பார்த்த

படியே அன்று கடிதமும் வந்தது. விலாசத்தைப் பார்த்ததும் அது தன் அருமைச் சகோதரியின் கையெழுத்து என்பதை அறிந்தான். ஆனால், உறையின் மூலையில் மஞ்சள் தடவப்படாமலிருந்தது மட்டும் அவனுக்குச் சற்று வியப்பையளித்தது. 'இப்படியும் ஒரு மறதியிருக்கலாமோ!' என்று எண்ணியவனாய் உறையைக் கிழித்துக் கடிதத்தைப் படிக்கலானான்.

மதூர்,
4—1—1925

அண்ணாவுக்கு, அநேக கோடி நமஸ்காரம். உபயக்ஷேமம். உன் கடிதத்தை மாப்பிள்ளை என்னிடம் கொடுத்தார். உன்னுடைய இஷ்டத்தை நாங்கள் அறிந்துகொண்டோம்.

ஓர் ஆண் மகனின் வாழ்க்கை லக்ஷியம் யாதென்று உனக்குத் தெரிந்திருக்கலாம். ஆனால் 'ஒரு பெண்ணின் வாழ்க்கை லக்ஷியம் இத்தன்மையதென்பதை நீ உணர முடியுமா? நீ மாத்திரமல்ல, எந்தப் புருஷனாயினும் சரி, அவன் பெண்ணின் பிதாவாகத்தான் இருக்கட்டும், அதைச் சரிவர உணர முடியாதென்றே நான் கருதுகிறேன். என் கன்னிப் பருவத்தில் நான் கற்பனை செய்திருந்த இல்வாழ்க்கைக்கும், இப்போது நடத்தி வரும் இல்வாழ்க்கைக்கும் உள்ள ஏற்றத் தாழ்வு எனக்கல்லவோ தெரியும்! ஒருக்கால் நான் காமுவின் சகோதரனாகவோ, அல்லது தந்தையாகவோ இருந்திருந்தால் அவளை உனக்கு இரண்டாந் தாரமாகக் கொடுக்கச் சம்மதப்பட்டிருக்கக் கூடும். ஆனால் நான் ஒரு பெண்; இரண்டாந் தாரமாக அவள் பிதாவுக்கு வாழ்க்கைப்பட்ட மாற்றாந்தாய். நான் அவளை இரண்டாந் தாரமாகக் கொடுக்க உடன்படுவேனாயின், எனக்கு மட்டுமல்ல, எங்கள் பெண் குலத்துக்கே நான் பெருந் துரோகத்தைச் செய்தவளாவேன்.

அப்படியானால், 'என்னைப் போன்ற தாரமிழந்தவன் கதிதான் என்ன?' என்று நீ என்னைக் கேட்கலாம். அந்தக் கேள்விக்கு என்னுடைய பதில் இதுதான்: கணவனை இழந்தவளுக்கு வாழ்க்கை முறை வகுக்க வல்லவர்களே அதற்குப் பதில் சொல்லட்டும்!

இவ்வூர்ப் பிடில் வித்வான் ராமசாமி அய்யர் வீட்டில் ஒரு பையன் இரண்டு வருஷமாய்ச் சங்கீதம் கற்று வருகிறான். மாலையில் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கு அவன் பாட்டுச் சொல்லிக் கொடுத்து வருகிறான். அவனுக்கு நிலமோ, வீடோ இருப்பதாகத் தெரியவில்லையென்று காமு சொல்லுகிறாள். ஆனால், அவனுடைய இளமையும், நன்னடத்தையும், சங்கீத ஞானமும், சரீரமும்தான் எங்களுக்குப் பெரும் ஆஸ்தியாகத் தோன்றுகின்றன. காமுவை அவனுக்கே கொடுக்க நான் தீர்மானித்திருக்கிறேன். அவள் மனமும் அவனைத்தான் நாடுகிறது.

நீ வேண்டுமானால் உன்னுடைய குழந்தைகளை இங்கே கொண்டுவந்து விட்டுச் செல்லவும். காமு புக்ககம் போய்விட்டால் எனக்கு வேறு குழந்தைகள் ஏது? அவர்களுக்கு ஒரு குறையும் நேராமல் நான் பார்த்துக் கொள்ளுகிறேன். உன் அருமைத் தங்கையென்ற முறையில் என்னால் உனக்கு இந்த உபகாரத்தைத்தான் செய்ய முடியும். மன்னிக்கவும்.

உன் பிரிய சகோதரி,
விசாலாட்சி.

# காலக்ஷேபம்

### ஆச்சரியம்!

"என்ன அப்பா, உங்கள் வீடு ஒரே நிசப்தமாயிருக்கிறதே! உன் அம்மா ஊரில் இல்லையா?"

"அம்மா ஊரில் இருக்கிறாள்! அப்பாதான் இல்லை!"

★

### இருவர் எதற்கு?

ஒரு ரஸ்தாவில் மின்சாரக் கம்பிகள் அறுந்து விழுந்து ஒரே ரகளையாயிருந்தது. அதைத் தொட்டால் ஏதாவது விபத்து நேரிடுமோ என்று எல்லோரும் பயந்து கொண்டிருந்தனர். பின் வரும் செய்தி பத்திரிகைக் காரியாலயத்துக்கு அனுப்பப்பட்டது:—

"இரண்டு பத்திரிகை நிருபர்களை அனுப்புங்கள்! அறுந்து போன கம்பியைத் தொட்டுப் பார்ப்பதற்கு ஒருவர்; இன்னொருவர் அதைப் பற்றிய செய்தியை எழுதுவதற்கு!"

★

### அளவே கிடையாதா?

டைபாய்ட் ஜுரம் வந்த ஒரு பெண் வைத்தியம் செய்துகொள்வதற்காக டாக்டரிடம் சென்றாள். டாக்டர் அந்தப் பெண்ணைப் பார்த்து, "நாக்கை நீட்டு!" என்றார்.

அவள் நாக்கை நீட்டினாள்.

"இன்னும் கொஞ்சம் நீட்டு!" என்றார் டாக்டர்.

அவள் மேலும் கொஞ்சம் நாக்கை நீட்டினாள்.

"இன்னும் கொஞ்சம்!" என்றார் டாக்டர்.

அவளுக்குக் கோபம் உண்டாயிற்று. "என்ன டாக்டர், பெண்களுடைய நாக்கு நீளத்துக்கு அளவே கிடையாதென்று நினைத்துக் கொண்டீர்களா!" என்று கேட்டாள்.

★

### பரவாயில்லை!

"ஏண்டா ராமு, உன்னை மாட்டு வண்டியல்லவா கொண்டுவரச் சொன்னேன். ஜட்கா வண்டி கொண்டு வந்திருக்கிறாயே?"

"பரவாயில்லை, எஜமான்! நம்ம ஜட்கா வண்டி மாட்டு வண்டி மாதிரிதான் போகுங்க!"

★

### நல்ல யோசனை!

"இந்தத் தெருவிலே நம்ம ரங்கசாமி நாயுடுவின் வீடு இருக்கிறதே. அந்த வீட்டு நம்பர் உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியாது, ஸார்! ஏன் ஒன்று செய்யுங்களேன், அவர் வீட்டுக் கதவைப் பார்த்தால் நம்பர் தானே தெரிகிறது!"



உலகெங்கிலும்
மிகவும் போற்றப்
பெற்றது!

ஸிரோலின்
'ரோச்'

சுவாஸகோச
உபாதைகளுக்கு சிறந்தது

---

குழந்தைகளுக்கு
முக்கியமானது

# பேபி கிரைப்

குழந்தைக்கு
ஆரோக்கியமளிப்பது

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு, வயிற்றுப் பொருமல், வயிற்று வலி அஜீரணம், மாந்தம் பல் முளைக்கும் போது ஏற்படும் வயிற்றுப்போக்கு, முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த திராவகம்

தயாரிப்பாளர்கள் :

தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி
மதுரை

ஏஜெண்டுகள் :—ராஜன் ட்ரக் ஸ்டோர்ஸ், நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3; சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா, விஜயா மெடிகல் ஸ்டோர்ஸ், செக்கனூர் வீதி.: எம். வி. எ. ஹமீது & கோ. 20. டாம் தெரு, கொழும்பு.

# கொஞ்சப் பொருள் அதிகமாய்ப் பயன்படும்படிச் செய்வது





**பிரசினை:** 9 தீக்குச்சிகளைக் கொண்டு 5 முக்கோணங்கள் அமைக்கவும்.



**விடை:** படத்தில் காட்டியுள்ளபடி 9 தீக்குச்சிகளை அமைக்கவும். ஐந்தாவது முக்கோணம் நிழலுருவமாய் அமைக்கப்பட்டுள்ள தீக்குச்சிகளினால் உண்டாகிறது.

தற்போதைய விலைவாசிகள் இருந்துகொண்டிருக்கிறவரையில் உணவு விஷயத்திலாகிலும், துணி விஷயத்திலாகிலும், கல்வி விஷயத்திலாகிலும் ஒரு திட்டத்தை அனுசரிக்காமல் காரியங்களைக் கண்டபடி செய்யும் பட்சத்தில், கொஞ்சப் பொருள் அதிகமாய்ப் பயன்படும்படி செய்யமுடியாது. குடும்பத்தின் வரவு செலவு திட்டத்தைச் சீர்குலைக்கும் அவசரமான சந்தர்ப்பங்களைச் சமாளிக்க ஏன் ஒரு திட்டம் வகுக்கக்கூடாது? நீர் இடைவிடாமல், ஒழுங்காகச் சேமித்து வருவீரானால், உம்மிடம் எப்போதும் ஒரு சேமநிதி இருக்கும். இத்தகைய சேமிப்புகளை வட்டிக்குப் போட்டுவைப்பதற்கான சிறந்த சாதனங்கள் நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகளும் ஸ்டாம்புகளுமேயாகும்.

## நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகள்.

### இவை முக்கியமான அனுகூலங்களாகும் :—

1. நீர் நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகளை 5, 10, 50, 100, 500, 1,000 அல்லது 5,000 ரூபாய்க்கு வாங்கலாம்.

2. ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களுள் ஒவ்வொருவரும் (அவர் பெரியவராயிருந்தாலுஞ் சரி மைனராயிருந்தாலுஞ் சரி) 5,000 ரூபாய் வரையில் வாங்கமுடியும். இரண்டு பேர் கூட்டாக 10,000 ரூபாய் வரையில் வாங்கலாம்.

3. இவைகளின் மதிப்பு 12 வருஷங்களில் 50 சதவிகிதம் உயருகிறது. வட்டிக்குப் போட்டு வைக்கப்பட்ட ஒவ்வொரு ரூபாயும் ஒன்றரை ரூபாய் ஆகிவிடுகிறது. இது யாதொரு கவர்ன்மெண்ட் பத்திரத்தின்மேல் கிடைக்கக் கூடிய மிக உயர்ந்த வட்டியாகும்.

4. சம்பாதிக்கப்படும் வட்டிக்கு இன்கம் டாக்ஸ் செலுத்த வேண்டியதில்லை.

5. இவைகளை 3 வருஷங்களுக்குப் பிறகு (5 ரூபாய் ஸெர்டிபிகேட்டுகள் விஷயத்தில், 18 மாதங்களுக்குப் பிறகு) ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம்.

6. சிறு தொகைகளைச் சேர்த்து வைப்பவர்கள் 1 ரூபாய், 8 அணா அல்லது 4 அணாவுக்கு ஸேவிங்ஸ் ஸ்டாம்புகள் வாங்கலாம். இப்படி வாங்கிச் சேர்த்து வரப்பட்ட ஸ்டாம்புகளின் மதிப்பு 5 ரூபாயானதும், அவைகளை கொடுத்துவிட்டு அவைகளுக்குப் பதிலாக ஒரு ஸெர்டிபிகேட் பெற்றுக் கொள்ளலாம்.

7. இந்த ஸெர்டிபிகேட்டுகள், ஸ்டாம்புகள் ஆகிய இரண்டையும் தபாலாபீஸ்களிலாவது கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட அதிகாரம்பெற்ற ஏஜென்டுகளிடமாவது ஸேவிங்ஸ் பீரோக்களிலாவது பெற்றுக் கொள்ளலாம்.

## உம்முடைய ஸேவிங்ஸ் க்ரூப்பில் இப்போதே சேரவும்

5






Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

